(2)

வெளியீடு

# முதலாளிகள் திட்டம்

வெ. ராமசாமி

1



சக்தி காரியாலயம்
சென்னை......மதுரை.

# எமது வெளியீடுகள்

## கைவசமுள்ளவை:

| | ரூ. | அ. |
|---|---|---|
| மலரும் மாலையும் | 6 | 0 |
| ஆசிய ஜோதி | 2 | 0 |
| நாஞ்சில் நாடு | 1 | 0 |
| மகுடபதி: கல்கி | 4 | 0 |
| நமது மொழிப் பிரசினை: காந்திஜி | 2 | 8 |
| ராஜாஜி கட்டுரைகள் | 4 | 8 |
| தமிழிசைப் பாட்டுக்கள் | 1 | 8 |
| ஆரணிய காண்டம்: டி. கே. சி. | 5 | 0 |

## கைவசமில்லாதவை:

மாணவருக்கு: காந்திஜி
பெண்களுக்கு: ,,
ராஜாஜி கதைகள்
அரும்பிய முல்லை: 'தீபன்'
கம்பர் யார்
முத்தொள்ளாயிரம்: டி. கே. சி.
சாரதையின் தந்திரம்: கல்கி
இதய ஒலி: டி. கே. சி.
இளந்தென்றல்: தே. சி.
தமிழிசைப் பாட்டு (ஸ்வரத்துடன்)

## வெளிவருபவை:

சீனமக்களும் சீனமும்: லின் யூடாங்
ஹிந்து முஸ்லிம் பிரசினை: காந்திஜி
சமஸ்தானப் பிரசினை: காந்திஜி
பிரிட்டிஷாருக்கு எனது வேண்டுகோள்: காந்திஜி
அறநூல்கள்: ராஜாஜி

புதுமைப் பதிப்பகம் லிமிடெட்
காரைக்குடி

# முதலாளிகள் திட்டம்



<-->



வெ. ராமசாமி

<-->

தினசரி வெளியீடு—1

விற்பனை உரிமையாளர்:

சக்தி காரியாலயம்

சென்னை :: மதுரை :: கோயமுத்தூர்

தொழில்ச்சாலை முதலாளிகளான பிர்லா, டாடா, டலால், ஸர். புருஷோத்தம் தாஸ், தாகூர் தாஸ் இன்னும் சில முதலாளிகளும் சேர்ந்து இந்திய மக்களின் வாழ்க்கை நிலையை உயர்த்துவதற்கென 'பம்பாய்த் திட்டம்' என்ற ஒரு திட்டத்தை வகுத்து அந்த திட்டத்தை இரண்டு பாகங்களில், புத்தக ரூபத்தில் வெளியிட்டிருக்கிறார்கள்.

முதலாளிகள் தயாரித்த இந்தத் திட்டம் இந்திய மக்களின் வாழ்க்கை உயர கொஞ்சம் கூடப் பலன் தராது என்பதைத் தகுந்த காரணங்களுடன் இரண்டு பாகங்களிலுமுள்ள விஷயங்களை ஸ்ரீ. வெ. ராமசாமி இந்தச் சிறு புத்தகத்தில் அலசி ஆராய்ந்திருக்கிறார்.

இது 'தினசரியின்' முதலாவது வெளியீடு



முதல் பதிப்பு : 5 - 10 - 1944 (2000)
இரண்டாம் பதிப்பு மே, 1945


விலை அணா நாலு

சக்தி பிரஸ் லிமிடெட் (சாந்தி பிரஸ்), சென்னை

# முதற் பாகம்

## 1. தொழில்த்திட்டம் எப்போது சாத்தியம்

சோவியத் ருஷ்யா இரண்டு விஷயங்களில் உலகத்துக்கு வழிகாட்டியாக இருந்திருக்கிறது. பொதுவுடைமையை இலட்சியமாகக்கொண்டு தேசத்தின் பொருளாதாரத்தையும், அரசியலையும் முதன்முதலாக மாற்றியமைத்த தேசம் சோவியத் ருஷ்யா தான். பொருளாதாரத்துறையில் விரைந்து முன்னேற்றம் அடையும்பொருட்டு, நாட்டின் தேவைகளுக்குத் தகுந்த வண்ணம் உற்பத்தித் திட்டங்களை உருவாக்கி அவற்றை வெற்றிகரமாக நடத்திக்காட்டியதும் சோவியத் ருஷ்யாவே. சோவியத் ஐந்து வருடத்திட்டங்கள் உலகப் பொருளாதார சரித்திரத்திலேயே ஒரு இடம் பெற்றுவிட்டன.

தொழில்த்திட்டங்கள் போடுவதில் சோவியத் ருஷ்யாவைப் பின்பற்றிய நாடுகள் பல. ஆனால், அவற்றுள் வெற்றியடைந்தவை மிகச் சிலவே. காரணம், தொழில்த்திட்டங்களை வெற்றிகரமாகக் கிரியாம்சையில் நடத்துவதற்கு முதலாளித்துவத்தை அடிப்படையாகக் கொண்டிருக்கும் பொருளாதார அமைப்பு அவ்வளவு எடுத்ததல்ல. இந்தப் பொருளாதார அமைப்பில் நெகிழ்ந்து கொடுக்கும் தன்மை மிகக் குறைவு. ஒவ்வொரு சொந்த முதலாளியும் தன் விருப்பப்படி கண்ணைமூடிக்கொண்டு பொருளை உற்பத்தி செய்வதில் ஈடுபடுகிறார். தான் உற்பத்தி செய்யும் பொருளுக்கு எவ்வளவு தேவை இருக்கிறது என்பதைப் பற்றியும், இதே பொருளை இன்னும் எத்தனை பேர் உற்பத்தி செய்கிறார்களென்பதைப் பற்றியும் அவருக்கு ஒன்றும் தெரியாது. சமுதாயம் முழுவதற்கும் என்ன தேவைப்படுகிறது, எந்தப் பொருளை அவசரமாக உற்பத்திசெய்யவேண்டும் என்பதைப்பற்றிச் சிந்தை செய்யாமல் அவர் தனது சொர்த சிரத்தையைக் கவனிப்பதிலேயே கண்ணும் கருத்துமாயிருக்கிறார். இது காரணமாகவே, முதலாளித்துவ அமைப்பைக்கொண்ட நாடுகளில் ஒரு ஒழுங்கைக் காண முடியவில்லை; அதற்குப் பதிலாக அராஜகமான ஒரு போக்கையே காண்கிறோம். பொதுவாக, முதலாளித்துவ நாடுகளில், சோவியத் ருஷ்யாவைப்போல, தொழில்த் திட்டங்களை உருவாக்கி வெற்றிகரமாக நடத்த முடியாததற்கு மூலகாரணம் இந்த அராஜகமான போக்கே ஆகும்.

எனவே, முதலாளித்துவத்தின் பிடி தளர்ந்து, முன்னேற்ற சக்திகள் மேலோங்கி நிற்கிற இடங்களில்தான் பொதுமக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தும் வண்ணம் தொழில் முன்னேற்றத்திற்குத் திட்டங்கள் வகுப்பதும், வகுத்த திட்டங்களை பயன்தரத்தக்க முறையில் நடத்துவதும் சாத்தியமாயிருக்கும். இதுதான் உலகப் பொருளாதாரச் சரித்திரத்திலிருந்து நாம் கற்றுக்கொண்ட பாடம்.

இந்த உண்மையை மனதில் வைத்துக்கொண்டால், இந்தியத்தொழில்ச்சாலை முதலாளிகள் தயாரித்து வெளியிட்டிருக்கும் 15 வருடத் திட்டத்தைப் பற்றித் தெரிந்துகொள்ள சௌகரியமாயிருக்கும். இந்தச் சிறு புத்தகத்தில் இந்த 15 வருஷத் திட்டத்தைப்பற்றியே நாம் ஆராய விரும்புகிறோம். இந்தத் திட்டத்தின் பல அம்சங்களைத் தனித் தனியாக ஆராயப்புகுமுன், அந்த அம்சங்கள் என்ன என்பதைத் தெரிந்துகொள்ள வேண்டாமா? இதை அடுத்த அத்தியாயத்தில் சுருக்கமாகப் பார்ப்போம்.

## 2. இந்தியத் தொழில்ச்சாலை முதலாளிகள் தயாரித்த திட்டம்

ஸர். புருஷோத்தமதாஸ் தாகூர்தாஸ், ஜே. ஆர். டி. டாடா, ஜி. டி. பிர்லா, ஸர். அர்தேஷிர்தலால், ஸர். ஸ்ரீராம் முதலிய இந்தியத் தொழிற்சாலை முதலாளிகள் இந்தியாவின் பொருளாதார அபிவிருத்திக்காக ஒரு திட்டத்

தைத் தயாரித்து, அதை வெளியிட்டிருக்கிறார்கள். இந்தத் திட்டத்தின் முக்கியமான குறிக்கோள் பதினைந்து வருஷ காலத்திற்குள் ஒவ்வொரு இந்தியனுக்கும் தற்காலம் கிடைக்கும் சராசரி வருமானத்தை இரண்டு மடங்கு அதிகமாக்கவேண்டுமென்பதாகும். ஒரு வருஷத்திற்கு ஜனத்தொகை 50 லட்சம் மேனி அதிகப்படுகிறதென்று வைத்துக்கொண்டு பார்த்தால், இப்போது கிடைக்கிற மொத்த வருமானம் 15 வருஷ காலத்தில் மூன்று பங்கு பெருகினால்தான், அதே வருஷ காலத்தில் ஒருவனுக்கு கிடைக்கும் சராசரி வருமானம் இரண்டு பங்கு அதிகமாகும். இதற்கு இப்போது விவசாயத்தின் மூலம் கிடைக்கும் வருமானத்தை 130 சதமானமும், தொழிலின் மூலம் கிடைக்கும் வருமானத்தை 500 சதமானமும், இதர சேவைகளின் மூலம் கிடைக்கும் வருமானத்தை 200 சதமானமும் உயர்த்தவேண்டும். இந்தத் திட்டத்தின்படி தேசத்தின் மொத்த வருமானத்தில் விவசாயத்தின் மூலம் 53 சத விகிதத்திற்குப் பதிலாக 40 சதமானமும், தொழிலின் மூலம் 17 சதமானத்திற்குப் பதிலாக 35 சதமானமும், சேவைகளின் மூலம் 22 சதமானத்திற்குப்பதிலாக 20 சதமானமும் கிடைக்கும். 15-வது வருஷக் கடைசியில், தொழிலுற்பத்தியின் மூலம் கிடைக்கும் வருமானம் ரூ. 2240 கோடியாகவும், விவசாயத்தின் மூலம் கிடைக்கும் வருமானம் ரூ. 2670 கோடியாகவும், சேவைகளின் மூலம் கிடைக்கும் வருமானம் ரூ. 1450 கோடியாகவும் இருக்கும். எனவே, 15-வது வருஷக் கடைசியில் தேசத்தின் வருமானம் 6360 கோடி ரூபாயாக இருந்தால், ஒரு இந்தியனின் சராசரி வருமானம் ரூ. 135 ஆக இருக்கும் என்று மதிப்பிட்டிருக்கிறார்கள்.

ரயில், மோட்டார், விமானம் சம்பந்தப்பட்ட இயந்திரங்கள், இன்னும் பல தொழில்களுக்குத் தேவைப்படும் இயந்திரங்கள், மின்சக்தி, ரசாயனப் பொருள்கள் ஆகிய மூலக்கருவிகளை உற்பத்திசெய்கிற தொழில்களை அபிவிருத்தி செய்வதில் திட்டத்தின் முற்பகுதியில் விசேஷ கவனம் செலுத்த வேண்டும் என்று இந்தத் திட்டத்தைத் தயாரித்தவர்கள் கூறுகிறார்கள். அதோடு மக்களின் தேவைகளை உடனடியாக பூர்த்திசெய்கிற ஆடை, சோப்பு, எண்ணெய், பேப்பர் போன்ற அழிபண்டங்களை உற்பத்தி செய்வதையும் மறந்துவிடக்கூடாது. இந்த அழிபண்டங்களை உற்பத்தி செய்வதற்குச் சிறிய முறையிலுள்ள தொழில்களையும் கிராமக் கைத்தொழில்களையும் நல்ல பயன் தரத்தக்க அளவில் உபயோகப் படுத்திக் கொள்ளலாம் என்று அவர்கள் எண்ணுகிறார்கள்.

### வாழ்க்கைத்தரம் என்றால் என்ன ?

தாங்கள் நினைக்கிற வாழ்க்கைத் தரத்துக்குக் குறைந்த பட்சம் தேவைப்படுகிற காரியங்கள் என்ன என்பதை இந்தத் திட்டத்தின் ஆசிரியர்கள் கூறியிருக்கிறார்கள்.

இந்தியா விவசாயத்தை நம்பிவாழுகிற தேசமாகயிருந்த போதிலும், பெரும்பான்மையான இந்தியர்களுக்குப் போதிய அளவு உணவு கிடைக்கவில்லை. கிடைக்கிற உணவும் ஆரோக்கியத்துக்கு ஒத்த முறையில் சத்துள்ளதாக இருக்கவில்லை. உணவு நிபுணர்கள் ஒருவனுக்கு ஒருநாளைக்குக் குறைந்தது 2800 காலரி அடங்கிய உணவு வேண்டும் என்று கணக்கிட்டிருக்கிறார்கள். ஆனால், இப்போது கிடைக்கும் உணவு ரொம்பக் குறைவாயிருக்கிறது. இந்த அளவுப்படி ஒருவனுக்கு உணவு கிடைக்க வேண்டுமானால் ஒரு வருஷத்திற்கு (சண்டை துவங்குமுன் இருந்த விலைப்படி) ரூ. 65 வேண்டும். ஆகவே இந்தக்கணக்குப்படி தற்போதுள்ள 39 கோடி இந்தியர்களுக்கு உணவுக்காகமட்டும் ஒரு வருஷத்தில் 2100 கோடி ரூபாய் செலவாகும்.

உணவுக்கு அடுத்தது ஆடை. ஒருவனுக்கு எவ்வளவு உணவு வேண்டும் என்பதில் அநேகமாக உலகத்தில் எல்லாப் பகுதிகளிலும் ஏறக்குறைய ஒத்த அபிப்பிராயம் இருக்கலாம். ஆடை விஷயம் அப்படியல்ல.

அந்தந்த நாட்டின் சீதோஷ்ண நிலைக்கும், பழக்க வழக்கங்களுக்கும் தக்க படி ஆடை மாறுகிறது. 1928-29ம் ஆண்டு தான் உலகத்திலே துணி அதிகமாக உற்பத்தி செய்த வருஷம். இந்த வருஷத்தில் உலக மக்களுக் குத் தலைக்கு 42 கஜம் துணி செலவாயிருக்கிறது. இதே வருஷத்தில் அமெரிக்காவில் தலைக்கு 64 கஜம் துணியும், ஜெர்மனியில் 34 கஜம் துணி யும், ஜப்பானில் 24 கஜம் துணியும் செலவழிந்திருக்கிறது. இந்தியாவிலோ என்றால் தலைக்கு 16·1 கஜம் துணிதான் செலவழிந்திருக்கிறது. துணி விலை ஒன்றுக்கு மூன்று மடங்காக விற்கிற இந்தக் காலத்தில் ஜனங்கள் முன்னையை விடக் குறைவாகவே துணிவாங்கமுடியும் என்பது தெரிந்த விஷயம். ஆனால், நியாயமான அளவு ஆடை வசதிகளைப் பூர்த்தி செய்து கொள்ள ஒரு இந்தியனுக்கு எவ்வளவு கெஜம் துணி வேண்டும் என்று பார்த்ததில், குறைந்தது முப்பது கஜம் துணியாவது வேண்டும் என்று மதிப்பிட்டிருக்கிறார்கள். இந்த அளவுக்கு 38.9 கோடி இந்தியர்களுக்கு ஆடை வசதி செய்யவேண்டுமென்றால் அதற்கு 1167 கஜம் துணிவேண்டும். ஒரு கஜம் 3½ அணா மேனி இவ்வளவு துணியையும் உற்பத்திசெய்ய 255 கோடி ரூபாய் பிடிக்கும்.

அதன் பிறகு, மக்களுக்கு முக்கியமாக தேவைப்படுகிற காரியம் வீடு ஆரோக்கியமாக வாழ ஒருவனுக்குக் குறைந்த பட்சம் 100 சதுர அடி இட மாவது வேண்டும் என்று கணக்கிட்டிருக்கிறார்கள். இப்போது இந்தியா வில் வீட்டு வசதி ரொம்பக் குறைவாக இருக்கிறது. 1941-ம் வருஷம் எடுத்த புள்ளிவிபரப்படி இந்தியாவில் இருக்கும் வீடுகளின் எண்ணிக்கை 760 லட்சமாகும். இவற்றுள் ஒரு கோடி வீடுகள் நகரங்களிலும், 6.6 கோடி வீடுகள் கிராமங்களிலும் இருக்கின்றன. சராசரி ஒருவனுக்கு எவ்வளவு இடம் கிடைக்கிறது என்பது தெரியவில்லை யென்றாலும், பம்பாய் மாகா ணத்தில் சில முக்கியமான நகரங்களில் இது சம்பந்தமான புள்ளி விபரம் கிடைத்திருக்கிறது. அதன்படி பம்பாயில் தொழிலாளர் வசிக்கும் பகுதி யில் ஒரு ஆளுக்கு 27.58 சதுர அடி இடமே கிடைக்கிறது. ஷோலாப்பூரில் இன்னும் குறைவு.

நாம் மேலே சொன்னபடி ஒரு வீட்டில் ஒருவனுக்கு குறைந்த பட்சம் நூறு சதுர அடி இடம் கிடைக்க வேண்டு மென்றால், 5 பேருள்ள ஒரு சராசரிக் குடும்பத்திற்கு சுமார் 500 சதுர அடி இடமுள்ள வீடுவேண்டும். இந்தக் கணக்குப்படி புதிதாக வீடு கட்டிக் கொடுக்கவும், இடிந்து பாழாகிப் போன வீடுகளைப் புதுப்பிக்கவும், மறுபடி கட்டவும் சுமார் ரூ. 1400 கோடி செலவாகும். இந்த வீடுகளை மராமத்துச் செய்து நல்ல நிலைமையில் வைத் துக்கொள்ள வருஷா வருஷம் ரூ. 28 கோடி பிடிக்கும்.

இந்தியர்களின் ஆரோக்கிய நிலை ரொம்பக் கேவலமான நிலையில் இருந்துவருகிறது. அரசாங்கம் அந்நியர்கள் கையில் இருப்பதால், ரொம்ப சாமானியமான சுகாதார வசதிகள் கூட நமது நாட்டினருக்குக் கிடைக்க வில்லை. இதன் காரணமாக ஒரு சராசரி இந்தியன் 26 வயதிலே இறந்து விடுகிறான். அகால மரணத்தோடு, குழந்தை மரணமும் அதிகமாக இருக் கிறது. இதற்குக் காரணம், நோய் நொடி வராமல் தடுப்பதற்கும், வந்த பிறகு வைத்தியம் செய்வதற்கும் போதிய வசதிகள் இந்தியாவில் இல்லை. பரந்து விரிந்து கிடக்கும் இந்தியா முழுவதிலுமே 7300 ஆஸ்பத்திரிகள் தான் இருக்கின்றன. அவற்றுள் 74000 படுக்கைகளே இருக்கின்றன. அதாவது 41000 ஜனங்களுக்கு ஒரு ஆஸ்பத்திரி, 4000 பேருக்கு ஒரு படுக்கை. ஆஸ்பத்திரிகள் தான் குறைவு என்றால் டாக்டர்களும் நர்சுகளும் அதிகப்படியாக இருக்கவில்லை. 9000 பேருக்கு ஒரு டாக்டரும், 86000 பேருக்கு ஒரு நர்சும் இருக்கிறார்கள். இங்கிலாந்திலோ 776 பேருக்கு ஒரு டாக்டரும், 435 பேருக்கு ஒரு நர்சும் இருக்கிறார்கள்.

நோய் நொடியின்றி ஆரோக்கியமாக நாம் வாழவேண்டுமென்றால் நல்ல தண்ணீர், மருந்து போன்ற அடிப்படையான சுகாதார வசதிகளை

யாவது பெற்றிருக்கவேண்டும். நகரங்களிலும் நாட்டுப் புறங்களிலும் தண்ணீர் வசதி செய்வது, ஒவ்வொரு கிராமத்திலும் ஒரு சிறிய ஆஸ்பத்திரி கட்டுவது, நகரங்களில் பெரிய ஆஸ்பத்திரிகளையும், கர்ப்ப ஸ்திரீகளுக்கு வேண்டிய சௌகரியங்களைச் செய்து வைக்கிற மருத்துவ நிலையங்களையும் கட்டுவது, காசம், குஷ்டம், பெண் வியாதிகள் போன்ற கொடிய நோய்களால் பீடிக்கப்பட்டவர்களுக்கு விசேஷமான மருத்துவ நிலையங்களை ஏற்படுத்துவது ஆகிய இவைபோன்ற காரியங்களைச் செய்வதற்கு முதன் முதலில் 281 கோடி ரூபாயும், வருஷா வருஷம் 185 கோடி ரூபாயும் செலவாகும் என்று மதிப்பிட்டிருக்கிறார்கள்.

இனி, கல்வி சம்பந்தமான விஷயத்தையும் நாம் மறந்துவிடக்கூடாது. இந்தியாவில் எழுதப் படிக்கத் தெரிந்தவர்களின் எண்ணிக்கை 1000க்கு 140 பேர்தான். இங்கிலாந்து, அமெரிக்கா போன்ற நாடுகளில் 1000க்கு 800 பேருக்குமேல் எழுதப் படிக்கத் தெரிந்தவர்களாயிருக்கிறார்கள். நமது நாட்டு மக்களுக்கு சாதாரணக் கல்வியாவது அளிக்க வேண்டுமென்றால், குறைந்தது ஒரு கிராமத்திற்கு ஒரு பள்ளிக்கூடமாவது வேண்டும். கிராமங்களிலும் நகரங்களிலும் ஆரம்பப் பள்ளிக்கூடங்களைக் கட்டுவதற்கு ரூ. 86 கோடி செலவாகும். வருஷா வருஷச் செலவு ரூ. 88 கோடியாகும்.

இது ஆரம்பக் கல்வி. இதற்குமேல் மத்தியதரக்கல்வி, உயர்தரக் கல்வி, விசேஷத் தொழிற்கல்வி முதலியவை இருக்கின்றன.

வாழ்க்கைக்கு அடிப்படையாகத் தேவைப்படுகிற காரியங்கள் இவை. வருடந்தோறும் இவை சம்பந்தமாக ஏற்படும் செலவு கீழ் வருமாறு:

| | | கோடி ரூபாய் |
|---|---|---|
| உணவு | ... | 2100 |
| உடை | ... | 260 |
| வீடு | ... | 260 |
| ஆரோக்கியம், மருந்து | ... | 190 |
| ஆரம்பக் கல்வி | ... | 90 |
| | | 2,900 |

இந்தக் கணக்குப்படி பார்த்தால், ஒவ்வொரு இந்தியனுக்கும் வருஷத்திற்கு ரூ. 74 வருமானம் வந்தால்தான் இந்த வசதிகளைப் பெற முடியும். சண்டை ஆரம்பமாகுமுன் சாமான்களின் விலை என்னவோ, அந்தக் கணக்குப்படிதான் ரூ. 74. ஆனால், இப்போது ஒரு இந்தியனுக்குக் கிடைக்கும் சராசரி வருமானம் ரூ. 65 தான் என்று பொருளாதார நிபுணர்கள் கணக்கெடுத்திருக்கிறார்கள். எனவே, நமது தேசிய வருமானம் ரொம்பக் குறைவாயிருக்கிறது. நாமும் மனிதர்கள் என்கிற முறையில் வாழவேண்டுமென்றால் நமது சராசரி வருஷ வருமானத்தைச் சத்தான அளவுக்கு அதிகப்படுத்த வேண்டும்.

**திட்டத்தின் நோக்கம்**

மனிதன் மனிதனாக வாழுவதற்குத் தேவைப்படுகிற வருமானம் மேலே குறிப்பிட்ட ரூ. 74. ஆனால் மனிதன் கேவலம் உயிரோடிருப்பதற்காக மட்டும் பிறக்கவில்லை; வாழ்க்கையை அனுபவிக்கவும் விரும்புகிறான். இந்தத் திட்டத்தின் நோக்கம் இப்போது கிடைக்கிற சராசரி வருமானத்தை 15 வருஷ காலத்தில் இரண்டு மடங்கு ஆக்கவேண்டும் என்பதாகும். இரண்டு மடங்கு ஆக்கிய பிறகும் மற்ற நாட்டினரோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது ஒரு இந்தியனின் சராசரி வருமானம் குறைவாகவேதான் இருக்கும். உதாரணமாக, அமெரிக்காவில் ஒருவரின் சராசரி வருஷ வருமானம் ரூ. 1406;

பிரிட்டனில் ரூ. 980; பிரான்சில் ரூ. 621; ஜப்பானில் 218. இரண்டு மடங்கு ஆக்கிய இந்தியனின் சராசரி வருஷ வருமானம் ரூ. 135 தான்.

இன்னும் 15 வருஷம் சென்ற பிறகு நம்மில் ஒவ்வொருவருக்கும் சராசரி வருஷ வருமானம் ரூ. 135 கிடைக்கவேண்டுமென்றால், இப்போதிருக்கிற மொத்த தேசிய வருமானத்தை மூன்று மடங்கு அதிகரிக்கவேண்டும். 15 வருஷ காலத்தில் ஜனத் தொகையும் பெருகிவிடுமல்லவா? அந்தக் கணக்கைக் கொண்டுதான் 15-வது வருஷக் கடைசியில் 1931-32ம் வருஷத்திய மொத்த தேசிய வருமானத்தை மும்மடங்காக்கினால், அதே வருஷத்துச் சராசரி வருமானத்தை இரண்டு மடங்கு ஆக்க முடியும் என்று கணக்கிட்டது.

1931-32 வருஷத்தில் கிடைத்த தேசிய வருமானத்தை மும்மடங்கு ஆக்குவதென்றால், அந்த வருஷத்தில் தொழிலின் மூலம் கிடைத்த வருமானத்தை 500 சத விகிதத்துக்கும், விவசாயத்தின் மூலம் கிடைத்த வருமானத்தை 130 சத விகிதத்துக்கும் சேவைகளின் மூலம் கிடைத்த வருமானத்தை 200 சத விகிதத்துக்கும் உயர்த்தவேண்டும் என்பது இந்தத் திட்டத்தின் குறிக்கோள்.

இந்தக் குறிக்கோள் பூர்த்தியாகவேண்டுமென்றால், பல தொழில்களை நிறுவவேண்டும். அவற்றுள் நீர்ச் சக்தியை உண்டுபண்ணுவது, உலோகங்களைத் தோண்டி எடுப்பது, உருக்குவது, இயந்திரங்கள் இயந்திரக் கருவிகள், ரசாயனப் பொருள்கள் போர்க் கருவிகள் முதலியவற்றை உற்பத்தி செய்வது, ரயில்வே எஞ்சின், மோட்டார், கப்பல், விமானம் போன்ற போக்கு வரத்துச் சாதனங்களை உற்பத்தி செய்வது ஆகிய இவைகளைப் போன்ற மூலத் தொழிலுக்கு முதன்மை ஸ்தானம் கொடுக்கவேண்டும். அத்துடன் துணி, கண்ணாடி, தோல், பேப்பர், எண்ணெய் போன்ற அழி பண்டங்களை உற்பத்தி செய்யும் தொழில்களையும் நிறுவவேண்டும். எனவே, தொழிலின் மூலம் கிடைக்கும் வருமானத்தை ரூ. 2240 கோடியாக்கவேண்டுமென்றால், அதன் காரணமாக சுமார் ரூ. 4480 கோடி மூலதனம் தேவைப்படும். சண்டைக்கு முன்னர் இந்தியாவின் மூலக் கருவித் தொழிலில் போட்டிருந்த மூலதனம் ரூ. 700 கோடிதான். திட்ட காலத்தின் முற்பகுதியில், கைத்தொழில், கிராமத் தொழில் ஆகியவற்றையும் அபிவிருத்தி செய்யவேண்டும்.

விவசாயத்தின் மூலம் கிடைக்கும் வருமானத்தை 130 சத விகிதத்துக்கு உயர்த்தவேண்டும். திட்டத்தின் முற்பகுதியில் உள்நாட்டுத் தேவைகளுக்குப் போதுமான விவசாயப் பொருள்களை உற்பத்தி செய்தால் போதும், வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யவேண்டாம் என்ற எண்ணத்தில் 130 சத விகிதத்துக்கு உயர்த்தினால் போதும் என்று சொல்லியிருக்கிறார்கள். அப்படியென்றால், வெளிநாட்டு ஏற்றுமதிக்கெனவே பயிரிட்டுவரும் பருத்தி, சாக்கு, தேயிலை போன்ற விவசாயப் பொருள்களின் உற்பத்தியைக் குறைத்து, உணவுப் பொருள்களை அதிகமாக உற்பத்தி செய்யவேண்டிய நிலை ஏற்படும். இதையொட்டி இன்னும் பல மாற்றங்கள் ஏற்படலாம். இந்த மாற்றங்களுக்குத் தகுந்தமுறையில் விவசாயத்தின் பொருளாதாரத்தை மாற்றியமைப்பதோடு, விவசாயக் கடனை ஒழிப்பது, துண்டு நிலங்களை ஒன்றுசேர்ப்பது, வண்டலை மழைத் தண்ணீர் அடித்துக்கொண்டு போகாதபடி வரப்பை உயர்த்துவது, உரம் போடுவது, நல்ல விதைகளைப் பாவுவது, வாய்க்கால் வெட்டுவது போன்ற முக்கியமான வேலைகளையும் செய்யவேண்டும். இந்தச் சீர்திருத்தங்களோடு உழுகிற முறையையும் அபிவிருத்தி செய்தால் ஒரு ஏக்கருக்கு முன்னர் கிடைத்ததைவிட 30 சத விகிதம் அதிகமாகக் கிடைக்கும் என்று திட்டத்தின் ஆசிரியர்கள் எண்ணுகிறார்கள். இந்தப் புதிய வழிகளில் நமது குடியானவர்களைப் பழக்குவதற்காக ஆங்காங்கே எடுத்துக்காட்டாக விளங்கும் பல பண்ணைகளை அமைக்கவேண்டும் என்றும் ஆலோசனை கூறுகிறார்கள். இதற்கெல்லாம் ரூ. 1245

கோடி செலவாகலாம். இவற்றுள் ரூ. 100 கோடி வருஷா வருஷம் செலவு செய்யவேண்டிய தொகையாகும். மூலக்கருவிகளையும் அழிபண்டங்களையும் அதிகமாக உற்பத்திசெய்யும்போது, போக்குவரத்து சாதனங்கள் அதிகமாகத் தேவைப்படும். ரயில்வழிகளை அதிகப்படுத்தவது, புதிய ரஸ்தாக்கள் போடுவது, கரையோரமாகச் செல்லும் படகுகளையும் கப்பல்களையும் அதிகரிப்பது ஆகிய இவைபோன்ற காரியங்களைச் செய்ய வேண்டிய அவசியம் ஏற்படும். 1938-39-ல் இந்தியாவில் 41000 மைல் ரயில் வழி இருந்தது. இதோடு இன்னும் 21000 மைலுக்குத் தண்டவாளம் போட்டு ரயில் வழியை 62000 மைல் ஆக்கவேண்டும். ரோட்டு வசதி இந்தியாவில் வெகு குறைவு. அந்நிய ஆட்சி ரோட்டைவிட ரயில்வேயில் தான் அதிக கவனம் செலுத்தியது. பிரிட்டிஷ் இந்தியாவில் இப்போது 3 லட்சம் மைல் ரோடு போடப்பட்டிருக்கிறது. இதை 6 லட்சம் மைல் ஆக்கவேண்டும். இதற்கெல்லாம் சேர்த்து முதன் முதலில் செலவழிக்க வேண்டிய தொகை ரூ. 897 கோடியும், வருஷா வருஷச் செலவு ரூ. 49 கோடியும் ஆகிறது.

ஒரு நாட்டின் வாழ்க்கையில் இன்னும் எத்தனையோ முக்கியமான அம்சங்கள் இருக்கின்றன. அவற்றை அபிவிருத்தி செய்வதற்குப் பணம் செலவாகும். எனவே, இந்தத் திட்டத்தின்படி 15 வருஷ காலத்தில் நமக்குத் தேவைப்படுகிற மூலதனம் கீழ் வருமாறு:

| | | கோடி ரூபாய் |
|---|---|---|
| தொழில் | ... | 4480 |
| விவசாயம் | ... | 1240 |
| போக்குவரத்து | ... | 940 |
| கல்வி | ... | 490 |
| சுகாதாரம் | ... | 450 |
| வீடு | ... | 2200 |
| சில்லரை | ... | 200 |
| | மொத்தம் | 10,000 |

### பொருளைப் பெறும் வழி

இவ்வளவு பணம் ஏழை இந்தியாவுக்கு எங்கிருந்து கிடைக்கும்? திட்டத்தின் ஆசிரியர்கள் இதற்கும் வழி சொல்லுகிறார்கள். இந்தப் பணத்தை அவர்கள் இரண்டு பிரிவாகப் பிரித்திருக்கிறார்கள்: வெளிநாட்டில் செலவழிப்பதற்குத் தேவைப்படுவது, உள்நாட்டில் செலவழிப்பதற்குத் தேவைப்படுவது என்று.

நாம் வீடுகளில் சேர்த்துவைத்திருக்கும் தங்கத்தையும் இன்னும் பல விலையுயர்ந்த பொருள்களையும் கொடுத்து வெளிநாட்டுச் செலவைச் சமாளிக்கலாம். பிரிட்டன் நமக்குக் கடன் தரவேண்டியிருக்கிறது. அந்தக் கடனைக் கொண்டும் வெளிநாடுகளில் நாம் வாங்குகிற சாமான்களுக்குப் பணம் கொடுக்கலாம். இந்தியாவுக்கு எப்போதுமே இறக்குமதியை விட ஏற்றுமதி அதிகம். அதிக ஏற்றுமதியினால் கிடைக்கும் பணத்தைக் கொண்டு அந்நிய நாட்டுச் செலவைச் சரிபண்ணலாம். இவ்வளவும் செய்த பிறகும் பணம் போதவில்லையென்றால் வெளிநாடுகளில் கடன் வாங்கலாம்.

உள்நாட்டுச் செலவை எப்படிச் சமாளிப்பது? ஜனங்கள் மீத்து வைக்கும் பணத்தைக் கொண்டும், நோட்டு வெளியீட்டை அதிகரிப்பதன் மூலமும் இந்தக் காரியத்தைச் செய்யலாம் என்பது இந்தத் திட்டத்தின் ஆசிரியர்களின் அபிப்பிராயம்.

இவை ஒவ்வொன்றின் மூலமும் எவ்வளவு பணம் கிடைக்கும் என்பதைப் பார்ப்போம்:

| | | | |
|---|---|---|---|
| வெளிநாட்டுச் செலவுக்கு வேண்டிய பணம்: | | கோடி ரூபாய் | |
| சேர்த்து வைத்திருக்கும் செல்வம் | ... | 300 | |
| ஸ்டெர்லிங் கடன் | ... | 1000 | |
| அதிக ஏற்றுமதி | ... | 600 | |
| வெளிநாட்டுக் கடன் | ... | 700 | |
| | | | 2600 |
| உள்நாட்டுச் செலவுக்கு வேண்டிய பணம்: | | | |
| சேமிப்பு | ... | 4000 | |
| சிருஷ்டித்த பணம் | ... | 3400 | |
| | | | 7400 |
| | | | 10000 |

இந்த 15 வருஷத் திட்டத்தை மூன்று ஐந்து வருடங்களாகப் பிரித்து ஒவ்வொரு ஐந்து வருடத்திற்கும் என்ன செலவாகும் என்றும் மதிப்பிட்டிருக்கிறார்கள். அவர்கள் கணக்குப்படி, முதல் 5 வருஷத்தில் ரூ. 4400 கோடியும், இரண்டாவது 5 வருஷத்தில் ரூ. 2900 கோடியும், மூன்றாவது 5 வருஷத்தில் ரூ. 5700 கோடியும் செலவாகும்.

## 3. இந்தியாவுக்குத் தொழில்த் திட்டம்?

இந்தியாவுக்குத் தொழில்திட்டம் என்று சொல்லும்போது பிரிட்டிஷ் ஏகாதிபத்திய வாதிகளுக்கு மனசை என்னமோ செய்கிறது. இந்தியா பிரிட்டிஷ் அதிகார வர்க்கத்தாரின் ஆட்சியின் கீழ் வந்தவுடன் அவர்கள் ஒரு விஷயத்தில் விசேஷ கவனம் செலுத்த ஆரம்பித்தார்கள். கிழக்கிந்தியக் கம்பெனியார் இந்தியாவில் கொள்ளையடித்த பணம் பிரிட்டனில் ஏற்பட்ட தொழிற் புரட்சிக்கு ரொம்ப உதவியாக இருந்தது. ஏன், தொழிற் புரட்சி ஏற்படுவதற்கு இதுதான் முக்கியமான காரணமாயிருந்தது என்றுகூடச் சொல்லிவிடலாம். தொழில் முறையில் ஏற்பட்ட புரட்சிகரமான மாற்றங்களினால் பழைய பண்ணைமுறை ஒழிந்து முதலாளித்துவ முறை வீறுகொண்டு தோன்ற ஆரம்பித்தது. அதன் காரணமாகத் தொழிற்சாலைகள் பெருகின. இந்தத் தொழிற்சாலைகளுக்கு மூலப்பொருள்கள் வந்து சேரவேண்டுவது முதலாவது தேவை. தொழிற்சாலைகளில் செய்து குவிக்கும் பண்டங்களை விற்க அந்நியச் சந்தைகளைக் கைப்பற்ற வேண்டுவது இரண்டாவது தேவை. இந்த இரண்டு தேவைகளையும் ஒரே சமயத்தில் கஷ்டமில்லாமல் பூர்த்தி செய்துகொள்ள ஒரு வழியிருக்கிறது என்று கண்டார்கள் பிரிட்டிஷ் முதலாளி வர்க்கத்தார். இந்தியாவில் கொஞ்ச நஞ்ச மிருந்த கைத்தொழில்களையும் நசுக்கி ஒழித்துவிட்டு, தங்களுக்கு மூலப் பொருள்களை ஏற்றுமதி செய்கிற தளமாகவும், தங்கள் தொழிற்சாலைகளில் உற்பத்தியாகும் பண்டங்களை விற்பதற்குரிய முக்கியமான சந்தையாகவும் இந்தியாவை ஆக்கவேண்டும் என்று திட்டம் போட்டார்கள். அவர்கள் போட்ட திட்டம் இன்றுவரை வெற்றிகரமாக நடந்து வருகிறது. டாடா இரும்புத் தொழிற்சாலையும், சில துணி மில்களும் இந்தியாவில் ஏற்பட்டிருக்கின்றனவே என்றால், அவை பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் சக்திக்கும் அப்பாற்பட்ட சரித்திரப் போக்கின் காரணமாக ஏற்பட்டவைகளேயன்றி வேறல்ல. இவைகளையும் நசுக்கிவிட முடியாத காரணத்தால், பிரிட்டிஷ் முதலாளிகள் தொலைந்துபோகட்டும் என்று வேண்டா விருப்போடு சகித்துக் கொண்டிருந்தார்கள். இந்த நிலையில் இரண்டாவது

உலகப் போர் ஆரம்பமாகிற சுப சகுனங்கள் தோன்ற ஆரம்பித்தன. இந்தியாவில் ரயில்வே எஞ்சின், மோட்டார் ஆகியவற்றை உற்பத்தி செய்ய வேண்டும், கப்பல் கட்டும் தொழிலைப் பெரிய முறையில் ஆரம்பிக்கவேண்டும் என்று இந்திய முதலாளிகள் எவ்வளவோ முயன்று பார்த்தார்கள். டாடா இரும்புத் தொழிலை உயிரோடு விட்டதே தவறு என்று எண்ணி மனம் புழுங்கிக்கொண்டிருக்கும் பிரிட்டிஷ் முதலாளிகள் இந்த அநியாயமான விருப்பத்திற்கு இடம் கொடுப்பார்களா? "இந்தியாவில் மூலக் கருவித் தொழில்களை ஏற்படுத்தச் செத்தாலும் சம்மதிக்கமாட்டோம்" என்று பட்டவர்த்தனமாகச் சொல்லிவிட்டார்கள். இன்று நடக்கிற பயங்கரமான போரில் இந்தியா தொழில் முறையில் அபிவிருத்தி யடைந்திருந்தால், நேச நாடுகளுக்கு எவ்வளவு உதவியாக இருந்திருக்கும்! இதைப் பிரிட்டிஷ் முதலாளிகள் சிறிதுகூடச் சிந்தித்துப் பார்க்கவில்லை, சிந்தித்துப் பார்க்கப் பிரியப்படவும் இல்லை. உலகம் முழுதும் பாஸிஸம் பரவினாலும் பாதகமில்லை, இந்தியாவில் மட்டும் தொழில் அபிவிருத்தி ஏற்பட்டு விட்டு விடக்கூடாது என்பதுதான் அவர்கள் எண்ணம். இந்தியா தனக்கு வேண்டிய மூலக் கருவிகளையும், இன்னும் பல முக்கியமான பொருள்களையும் தானே உற்பத்தி செய்துகொள்ள ஆரம்பித்துவிட்டால், பிரிட்டன் தன் தொழிற்சாலைகளை மூடவேண்டிய கட்டாயமல்லவா ஏற்பட்டுவிடும்?

இந்தியாவைப் பிடிக்கப்போவதாக ஜப்பான் பயமுறுத்திக் கொண்டிருக்கிற இப்போது ராணுவத் தேவைகளை ஒட்டியாவது இந்தியாவில் மூலக் கருவித் தொழில்களை உண்டாக்குவது அவசியம். அமெரிக்காவிலிருந்தும் இங்கிலாந்திலிருந்தும் ராணுவ தளவாடங்களை அனுப்ப நாள் பிடிக்கிறது. தளவாடங்களை அனுப்புவதில் ஏற்படுகிற தாமதம் எதிரிக்குப் பலம் அளிக்கிறது. இது ரொம்ப அபாயமான நிலை. இந்தியாவில் ஏதோ சில மூலத் தொழில்களையாவது ஏற்படுத்தத்தான்வேண்டும் என்று அமெரிக்க கிரேடி தூது கோஷ்டி சிபார்சு செய்தது. "தாமதம் ஏற்பட்டால் ஏற்பட்டுவிட்டுப் போகிறது, இந்தியாவில் மூலத் தொழில்களை ஏற்படுத்த இசையமாட்டோம்" என்று பிரிட்டிஷ் அரசாங்கம் சொல்லிவிட்டது. உலகத்தில் எல்லா விஷயங்களுக்கும் ஒரு எல்லை இருக்கிறது. உலகத்திற்கு அப்பாற்பட்ட பேரண்டத்துக்கும் ஒரு எல்லையிருக்கிறது. ஆனால் பிரிட்டிஷ் முதலாளி வர்க்கத்தாரின் சுயநல வெறிக்கு ஒரு எல்லையே இல்லை.

பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் தொடர்ந்து பின்பற்றி வரும் இந்தக் கொள்கையினால், இந்தியாவின் பொருளாதார அமைப்பு சிதைந்து வறுமையும் பிணியும் துர்ப்பாக்கியம் பிடித்த இந்தியர்களைப் பற்றிக்கொண்டு துன்புறுத்தி வருகின்றன. எதற்கெடுத்தாலும் பிரிட்டனை எதிர்பார்க்கவேண்டிய பரிதாபகரமான நிலையில் இன்று நாம் இருக்கிறோம். அரசியலிலன்றி, பொருளாதாரத்திலும் நாம் பிரிட்டிஷ் முதலாளிகளின் அடிமைகளாக இருக்கிறோம். மூலக் கருவிகளை உற்பத்தி செய்துகொள்ளுகிற சக்தி நமக்கு ஏற்பட்டுவிட்டால், பொருளாதாரத் துறையில் பிரிட்டனுடைய பிடியிலிருந்து நாம் விடுபட்டுவிடலாம். அந்நிய முதலாளிகள் நம்மைச் சுரண்டிப் பிழைக்கிற காரியமும் அதோடு நின்றுவிடும். நமது பொருளாதார வாழ்க்கையைப் புனர்நிர்மாணம் செய்து, ஒழுங்காக நடத்துவதற்கும் நமக்கு பல வசதிகள் ஏற்படும். இந்த உண்மையை ஜவஹர்லால் நேரு தேசியத் திட்டக் கமிட்டிக்குத் தான் எழுதிய ஒரு குறிப்பில் வெகு அழுத்தமாகச் சொல்லியிருக்கிறார்.

எனவே, சிதைந்து போயிருக்கும் இந்தியப் பொருளாதாரத்தைத் திருத்தியமைக்க ஒரு தொழில் திட்டம் வேண்டும், அந்தத் திட்டத்தில் மூலக் கருவித் தொழில்களுக்கு முதன்மை ஸ்தானம் கொடுக்கவேண்டும் என்கிற விஷயத்தில் இரண்டு அபிப்பிராயங்கள் இருக்கமுடியாது. இந்தியாவுக்கு அவசரமாகத் தேவைப்படுகிற காரியம் இது. இந்தத் திட்டம் இந்தியாவின்

அபிலாஷையை அப்படியே பிரதிபலித்துக் காட்டுகிறது என்பதில் ஒரு சிறிதும் சந்தேகமில்லை. மூலக்கருவித் தொழிலுக்குப் பிரதானம் கொடுக்காத எந்தத் திட்டமும் இந்தியாவுக்கு, பொருளாதாரத் துறையில், கதிமோட்சத்தைக் கொண்டுவரப் போவதில்லை என்பதை இந்தத் திட்டம் சந்தேகத்திற்கு இடமின்றி எடுத்துக் காட்டுகிறது. விவசாயத்திற்குத் தான் பிரதானம் கொடுக்கவேண்டும், அழிபண்டங்களை உற்பத்தி செய்யும் தொழில்களுக்குத் தான் முக்கியத்துவம் அளிக்கவேண்டும், ஜனங்களின் தேவையெல்லாம் பூர்த்தியாகி நாட்டில் சுபிட்சம் ஏற்பட்ட பிறகுதான் மூலக் கருவித் தொழில்களில் முனையவேண்டும் என்று சொல்லித் திட்டங்கள் வகுப்பதெல்லாம், ஜனங்களை ஏமாற்றுவதற்கோ, அல்லது தங்களையே ஏமாற்றிக் கொள்வதற்கோ செய்கிற காரியங்கள் தான். இவை நாட்டின் உண்மையான அபிலாஷையைப் பிரதிபலிக்கவில்லை, பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் அபிலாஷையைத் தான் பிரதிபலிக்கின்றன என்று சொன்னால் குற்றமாகாது.

### இங்கிலாந்தில் வரவேற்பு

இந்தத் திட்டத்தை இங்கிலாந்தில் வரவேற்கிற அழகே ஒரு தனி அழகு. மாஜி இந்தியப் பொருளாதார மந்திரியாக இருந்த ஸர் ஜார்ஜ் ஷுஸ்டர் இந்தத் திட்டம் இந்தியாவுக்கு வேண்டியது தான் என்று எடுத்தவுடனே சொல்லிவிட்டார். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியவாதியான ஷுஸ்டர் இப்படி நன்றாகச் சொல்லிவிட்டாரே என்று நாம் ஆச்சரியப்படுவோம். ஆனால், அவ்வளவுக்கு அவர் இடம் கொடுக்கவில்லை. இந்தியா விவசாய நாடு, அங்கே மூலத் தொழில்களை வளர்ப்பது பொருத்தமாயிராதே என்று பிறகு ஆரம்பிக்கிறார். இவர் ஒருவர் தான் இப்படிச் சொல்லுகிறார் என்பதல்ல. பிரிட்டிஷ் முதலாளி வர்க்கத்தார் அனைவரும், அவர்கள் நடத்துகிற பத்திரிகைகள் அனைத்தும் இந்த ஷுஸ்டர் பல்லவியைத் தான் பாடி வருகின்றன. இந்தியாவின் உடம்புக்கு மூலத்தொழில் வளர்ச்சி ஒத்துக் கொள்ளாதாம். இது இந்தியாவின் பண்பாட்டுக்குப் பொருத்தமில்லை, கலைக்குப் பொருத்தமில்லை, மதத்திற்குப் பொருத்தமில்லை என்றெல்லாம் கூடச் சொல்ல ஆரம்பித்துவிடுவார்கள். இந்தியா தங்கள் கையிலிருந்து நழுவிவிடப் போகிறதே என்ற பயம் பிரிட்டிஷ் முதலாளிகளைப் பிடித்துக் கொண்டு ஆட்டுகிறது. இந்தியாவில் மூலத்தொழில் பெருகிவிட்டால், தங்கள் பாடு திண்டாட்டமாகிவிடுமே என்பதைப் பட்ட வர்த்தனமாகச் சொல்லுவதற்குப் பதிலாக இப்படிச் சுற்றிச் சுற்றிவருகிறார்கள். இவர்கள் என்ன நோக்கத்தில் இந்தியர்களின் விவசாய வளர்ச்சியில் இவ்வளவு ஈடுபாடு செலுத்துகிறார்களென்பதைப் புரிந்து கொள்ளாமல், இந்தியர்களில் சிலரும் கிளிப்பிள்ளைகளைப் போல இவர்கள் சொல்லுவதைத் திருப்பிச் சொல்லுகிறார்கள். தெரிந்தோ, தெரியாமலோ இவர்கள் செய்யும் இந்தக் காரியம் இந்தியாவின் நன்மைக்கு முரண்பாடானதாகும். இந்த மனப் போக்கைப் பொதுமக்கள் சந்தர்ப்பம் வாய்க்கும் போதெல்லாம் கண்டிப்பதில் களைப்படையக்கூடாது.

## 4. இது தேசியத் திட்டமா?

சென்ற உலக யுத்தத்திற்குப் பிறகு பொருளாதாரத் திட்டங்கள் போடுவதில் ஒரு மோகம் ஏற்பட்டிருக்கிறது. முதலாளித்துவ முறையை அடிப்படையாகக் கொண்ட பொருளாதாரம் அடிக்கடி பொருளாதார நெருக்கடிகளையும் போரையும் கொண்டு வருகிறது. "மிதமிஞ்சிய" உற்பத்தியினால் பண்டங்களை விற்கமுடியாத காரணத்தால் தொழிற்சாலைகளையெல்லாம் மூடவேண்டிய கட்டாயமும், வேலையில்லாத் திண்டாட்டமும் ஏற்படுகின்றன. பொருளாதார நெருக்கடியும் வேலையில்லாத் திண்டாட்டமும் முதலாளித்துவத்தின் நிரந்தரமான அம்சங்களாக இருக்கின்றன. வியாபார நெருக்கடிகளுக்கும், வேலையில்லாத் திண்டாட்டத்துக்கும் இடையில்

விழிபிதுங்கிக் கொண்டிருந்த நாடுகளுக்கு சோவியத் ருஷ்யா பொருளாதாரத் திட்டங்கள் போட்டு, அவற்றில் அபரிமிதமான வெற்றியடைந்தது பெரிய ஆச்சரியத்தை யுண்டாக்கியது. நாமும் பொருளாதாரத் திட்டங்கள் போட்டு ஏன் வெற்றியடையக் கூடாது என்ற சபலம் இந்த நாடுகளுக்கு ஏற்படுவது இயல்புதான். இந்தக் காலத்திலிருந்தே பொருளாதாரத் திட்டங்களுக்கு ஒரு தனி மதிப்பு ஏற்பட்டுவிட்டது. இனிமேல் எந்த நாடும், சிறப்பாக தொழில்த் துறையில் பிற்போக்கா யிருக்கும் சீனு, இந்தியா போன்ற நாடுகள், பொருளாதாரத் திட்டங்களின்றி ஒரு குறிப்பிட்ட காலத்திற்குள் முன்னேற்றமடைய முடியாது என்ற எண்ணமும் வலுத்து வருகிறது. இந்த நிலையில் இந்தியாவிலும் ஒரு பொருளாதாரத் திட்டம் வேண்டும் என்ற ஆவல் ஏற்பட்டதில் ஆச்சரியம் இல்லை. திட்டத்தை யார் வேண்டுமானுலும் தயாரிக்கலாம். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் நன்மைக்காக இந்தியாவில் பொருளாதாரத் திட்டத்தை அமைத்துக் கொள்ளலாம். இந்திய முதலாளிகளின் நன்மைக்காகவும் அதை அமைத்துக் கொள்ளலாம். இவை இரண்டுமின்றி, இந்திய மக்களின் நன்மைக்காக ஒரு திட்டத்தைத் தயாரிக்கவும் செய்யலாம். திட்டத்தைத் தயாரிப்பது பெரிதல்ல. ஆனுல், எந்த நோக்கத்திற்காக, என்ன உணர்ச்சியில் அதைத் தயாரிப்பது என்பது தான் இப்போதைய பிரச்னை.

சோவியத் ருஷ்யாவும் திட்டங்கள் போட்டு அவற்றில் வெற்றி யடைந்தது; அதைப் பின்பற்றி நாஜி ஜெர்மனியும் திட்டங்கள் போட்டு வெற்றியடைந்தது. சோவியத் ருஷ்யாவின் திட்டங்கள் சோவியத் மக்களின் வாழ்க்கைத்தரத்தை பிரமிக்கத்தக்க அளவு உயர்த்திவிட்டன. நாஜி ஜெர்மனியில் போட்ட திட்டங்கள் முதலாளி வர்க்கத்தாரின் சிரத்தையை ஒரு இம்மி கூடப் பாதிக்கவில்லை. அவர்களுக்குக் கிடைக்கும் கொள்ளை லாபத்திலும் அந்தத் திட்டங்கள் கைவைக்கவில்லை. முதலாளிகளையும், அவர்கள் லாபத்தையும் பாதிக்காத திட்டம் நாட்டு மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்கு உபயோகமான பொருள்களைச் செய்து குவிக்க முடியாது; அதற்குப் பதிலாக போர்க் கருவிகளைத் தான் செய்து குவிக்க முடியும். அவைகளைத் தான் நாஜி ஜெர்மனி செய்தது. நாஜி ஜெர்மனி போட்டு நடத்திய திட்டத்தின் காரணமாக, ஜெர்மன் மக்கள் பொருளாதாரத் துறையிலன்றி அரசியலிலும், சமுதாயத் துறையிலும், கலைத்துறையிலுங்கூட, தங்களுக்கிருந்த சுதந்திரத்தை இழந்துவிட்டார்கள். முதலாளித்துவ முறையைக் கொஞ்சங்கூட மாற்ருமல் உடும்புப் பிடியாகப் பிடித்துக் கொண்டு, பொருளாதாரத் துறையில் ஏற்படுகிற நெருக்கடிகளைச் சமாளித்துவிடலாம் என்பது வீண் பிரமை. இந்த அற்புதத்தை நடத்திக் காட்டுவதாகப் புகுந்த ஜெர்மன் பாஸிஸம் பயங்கரமான இன்றையப் போரைக் கொண்டு வந்திருக்கிறது.

சோவியத் ருஷ்யாவில் நடந்ததுபோல மக்களை ஈடேற்றுவதற்கும், நாஜி ஜெர்மனியில் நடந்ததுபோல மக்களை அமுக்கி அடக்கி வைத்திருப்பதற்கும், எதற்கும் திட்டம்போட்டு விடலாம் என்று காட்டுவதற்கே இந்த உதாரணங்களை எடுத்துக் காட்டினேம்.

நமது தொழில்சாலை முதலாளிகள் இந்திய மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தி அவர்களை ஈடேற்றிவிடவேண்டும் என்ற நோக்கத்தினுல் தூண்டப்பட்டே இந்த 15 வருஷத் திட்டத்தைத் தயாரித்திருக்கிறுர்கள். இதைத் தேசியத் திட்டம் என்றே அவர்கள் குறிப்பிட்டிருப்பது குறிப்பிடத்தக்கது. ஆனுல், இந்திய தேசியத் திட்டம் வெற்றிகரமாக நடக்கவேண்டும் என்ருல், அதற்குமுன் குறைந்தபட்சம் கீழ்கண்ட மாற்றங்கள் ஏற்பட வேண்டும்.

(1) இந்தியா அரசியல்த் துறையிலும், பொருளாதாரத் துறையிலும் பூரண விடுதலையடைந்து, இந்திய மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பொது ஜன அரசாங்கம் ஏற்படவேண்டும்.

(2) நிலச்சுவான்தார் முறை ஒழிந்து, நிலமும், சுரங்கச் செல்வங்களும் பொதுமக்களின் சொத்தாக மாறவேண்டும்.

(3) மூலத் தொழில்களும், பாங்குகளும், அரசாங்கத்துக்கே சொந்தமாகி அரசாங்கத்தின் கட்டுப்பாட்டின் கீழ் கொண்டுவரப்பட வேண்டும்.

இந்த உண்மைகளை மனதில் வைத்துக்கொண்டு தான் தேசியத் திட்டக் கமிட்டியில் ஜவஹர்லால் நேரு கீழ்வருமாறு சொன்னர் :

''தேசியத் திட்டத்தைத் தயாரிக்கும் அதிகாரிகள் தாங்கள் விரிவான முறையில் தயாரித்த திட்டத்தைக் கிரியாம்சையில் நடத்துவதற்குச் சக்தியற்றிருக்கும்போது, அவர்கள் தயாரிக்கும் திட்டம் வெறும் கட்டுரை ரூபத்தில் இருக்கமுடியுமேயன்றி காரியத்துக்கு உதவாது. ஆகலால் திட்டம் வெற்றியடைய வேண்டுமென்ருல், அதற்கு முன்னதாகவே வெளிநாட்டு ஆதிக்கத்திலிருந்து நாடு பூரண விடுதலைபடைந்து விடவேண்டும்.''

இந்தத் திட்டத்தைத் தயாரித்த ஆசிரியர்கள் இந்த உண்மையை உணரவில்லையென்று சொல்லமுடியாது. ஆயினும், பொருளாதார விஷயங்களில் மட்டும் பூரண சுதந்திரமுள்ள ஒரு தேசிய அரசாங்கம் இருந்தால் போதும் என்று இவர்கள் திருப்தி யடைகிருர்கள்.

அரசியலில் பூரண ஆதிக்கம் பெற்ற ஜனங்களின் அரசாங்கம் தான் பொருளாதாரத் துறையிலும் பூரண சுதந்திரத்தோடு விளங்கமுடியும். அரசியல் ஆதிக்கமில்லாத அரசாங்கம் பொருளாதாரத் துறையில் எப்படிச் சுதந்திரமாக நடந்துகொள்ள முடியும் என்பது நமக்கு விளங்கவில்லை. எனினும் அர்த்தமற்ற இந்தப் பொருளாதாரச் சுதந்திரத்தை நம்பியே நமது தொழில்சாலை முதலாளிகள் இந்தத் திட்டத்தைத் தயாரித்திருக்கிருர்கள். இவர்களிடம் காணப்படுகிற இந்த அரசியல் பிற்போக்கு திட்டத்தின் உருவத்தையே பிற்போக்கான முறையில் மாற்றிவிட்டிருக்கிறது. இந்தத் திட்டத்தின் பல முக்கியமான அம்சங்களில் மேலே சொன்ன பிற்போக்கு என்கிற கறைபடிந்திருக்கிறது. இந்தப் பிற்போக்கான மனப்போக்கு ஒழுங்கான பொருளாதார அபிவிருத்திக்கு முட்டுக்கட்டையாக இருக்கும் என்பதில் ஐயமில்லை.

இப்படிப் பிற்போக்காக இருப்பதற்கு அவர்கள் ஒரு நியாயம் சொல்லுகிருர்கள். இந்தியா அந்நிய ஆதிக்கத்திலிருந்து விடுபடுவதற்கும் பூரண சுதந்திரம் அடைவதற்கும் இடையிலுள்ள காலத்திற்கென்றே இந்தத் திட்டத்தைத் தயாரித்திருக்கிறேம் என்று சொல்லுகிருர்கள். அப்படியே வைத்துக்கொண்டாலும். அவர்கள் சொல்லுகிற நியாயத்தை ஏற்றுக்கொள்ள முடியாது. இடைக்காலத்திற்கென்றே போடுகிற திட்டமும் இறுதியில் சுதந்திர இந்தியாவுக்குப் போடுகிறதிட்டத்தைப்போல மூலாதாரமான கொள்கைகளைத் தான் கடைபிடிக்க வேண்டிவரும்; மக்களின் அடிப்படையான தேவைகளைப் பூர்த்தி செய்யத்தான் வேண்டிவரும். பெயரில் வேண்டுமானுல் வித்தியாசம் இருக்கலாமேயன்றி, கிரியாம்சையில் வித்தியாசம் இருக்கமுடியாது. தேசியத் திட்டத்தைப் பற்றிக் கூறும்போது பண்டித ஜவஹர்லால்நேரு கீழ் வருமாறு கூறுகிருர் :

'' இந்தியா இருக்கும் இன்றைய நிலையிலும், நாட்டின் செல்வத்தைப் பெருக்கி, மக்களின் வாழ்க்கைத்தரத்தை உயர்த்துவதற்குச் சாதகமாயிருக்கும் கொள்கைகளை யெல்லாம் கடைப்பிடித்து, அதற்கு வேண்டிய நடவடிக்கைகளை எடுத்துக் கொள்ளவேண்டும். ஆயினும் நாம் எடுத்துக் கொள்ளும் முயற்சிகள், சுதந்திர இந்தியாவுக்காக நாம் தயாரித்த திட்டத்தைப் பூர்த்தி செய்வதற்கு அநுகுணமான முறையில் அமைந்திருக்கவேண்டும்.

'' இம்முயற்சிகளினுல் தற்காலம் ஜனநாயக ஆட்சிக்குத் தடையாயிருப்பவைகளைக் கூடிய வரையில் சக்தியற்றதாகச் செய்துவிடவேண்டும்.

புதிய சிரத்தைகளேயோ, புதிய முதலாளிகளேயோ, தவருன கொள்கைகளேயோ சிருஷ்டித்து விட்டுவிடக் கூடாது. ஏனெனில் இவை நமது லட்சியத்தை அடைவதற்கும், நமது திட்டம் பூரணமாக வெற்றி யடைவதற்கும் தடையாக நிற்கும்.''

ஜவஹர்லால் நேருவின் இந்த எச்சரிக்கையைத் திட்டத்தின் ஆசிரியர்கள் கவனித்ததாகத் தெரியவில்லே. இந்தியாவில் பொருளாதார வளர்ச்சிக்கு இன்று தடையாக இருக்கும் தீமைகளே ஒழிப்பது ஒருபுறம் இருக்கட்டும். இந்தத் தீமைகள் திட்டத்தினல் வலுவடைந்து நம்மை இன்னும் அதிகமாகத் துன்புறுத்தாமலிருப்பதைப் பற்றியாவது அவர்கள் ஆலோசித்தார்களா என்ருல், அதுவும் இல்லேயென்று தான் சொல்ல வேண்டும்.

நமது தொழில்த் தலேவர்களின் குறிக்கோள் 15 வருஷ காலத்தில் நமது மக்களின் வாழ்க்கைத் தரத்தை இரண்டு மடங்காக உயர்த்திவிட வேண்டும் என்பதாகும். ஆயினும் செல்வத்தை விநியோகிப்பது சம்பந்தமான பிரசினேயை இப்போது நாங்கள் ஆராயவில்லே, அதைத் தள்ளிப் போட்டிருக்கிருேம் என்று அவர்கள் சொல்லுகிருர்கள்.

செல்வத்தைச் சிருஷ்டிப்பது வேறு. அதை விநியோகிப்பது வேறு. முதலாளித்துவ முறையில் செல்வத்தை சிருஷ்டிப்பதில் ஒன்றும் குறையில்லே. ஆனல், அதை விநியோகிப்பதில்தான் குறையிருக்கிறது. மனிதன் மனிதனுக வாழ்வதற்குரிய முறையில், சம்பளம், உபகாரச் சம்பளம், குழந்தைப் பராமரிப்புப் போன்ற வழிகளின் மூலம் செல்வத்தை நியாயமான முறையில் விநியோகிக்காத வரையில் பொதுமக்களின் வாழ்க்கைத் தரத்தில் அபிவிருத்தியைக் காணமுடியாது. செல்வத்தைச் சிருஷ்டிப்பதற்கு நாம் எப்படித் திட்டம் போடுகிருேமோ, அதே முறையில், செல்வத்தை விநியோகிப்பதற்கும் திட்டம் போடவேண்டும். பொருளுற்பத்திக்காகத் திட்டம் போட்டுவிடுவதிலுலேயே பொதுமக்களின் வாழ்க்கைத்தரம் உயர்ந்துவிடுமென்கிற நிச்சயம் இல்லே. அதைப்போலவே தேசிய வருமானம் அதிகரிப்பதனுல், வாழ்க்கைத்தரம் அதிகரிக்க வேண்டுமென்கிற அவசியமும் இல்லே. பொதுமக்களின் வாழ்க்கைத்தரம் உயருவதற்குத் தேசிய வருமானம் அதிகரிக்க வேண்டுவது அவசியம். ஆனல், வாழ்க்கைத் தரம் குறைந்துகொண்டு போகும் காலத்திலும் தேசிய வருமானம் பல மடங்கு அதிகரித்திருப்பது அசாத்தியமான காரியமல்ல. உண்மையில், இதுதான் முதலாளித்துவ நாடுகளில் இன்று நடைபெற்று வருகிறது. செல்வம் குவியக் குவிய வறுமை அதிகப்படுகிறது. செல்வத்தை உற்பத்தி செய்வதில் மட்டும் கவனம் செலுத்திவிட்டு, அதை விநியோகிப்பதை மறந்துவிடுகிற கொள்கையைத்தான் ஜவஹர்லால் நேரு தவருன கொள்கையென்று குறிப்பிடுகிருர். இது காரணமாகவேதான் தேசியத் திட்டக் கமிட்டி தயாரித்த திட்டத்தில் உற்பத்தி, விநியோகம், அழிவு, வியாபாரம், வருமானம் இன்னும் இவை போன்ற ஒன்றேடொன்று நெருங்கிய தொடர்புடையதான பல விஷயங்கள் தெளிவாக ஆராயப்பட்டிருக்கின்றன. கராச்சிக் காங்கிரசில் அடிப்படையான உரிமைகள் சம்பந்தமாக நிறைவேற்றிய தீர்மானத்தை ஆதாரமாகக்கொண்டு, எல்லா மக்களுக்கும் குறைந்தபட்ச வாழ்க்கை வசதிகள் கிடைக்கக்கூடிய முறையில் செல்வத்தை விநியோகிப்பதற்கு தேசியத்திட்டக் கமிட்டி முயலுகிறது.

எனவே, செல்வத்தை விநியோகிப்பதைத் தள்ளிப் போடுகிற திட்டம் அல்லது அதை அலட்சியம் செய்கிற திட்டம் பொதுஜனங்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துகிற திட்டமாக இருக்க முடியாது. அதைத் தேசியத் திட்டம் என்று கூறுவது எந்த விதத்திலும் பொருந்தாது. ரொம்ப அதிகமாகச் சொன்னல், இந்திய முதலாளிகளின் திட்டம் என்று தான் அதைச் சொல்லலாம்.

## 5. யாருக்குச் சொந்தம்?

விநியோகப் பிரசினையை மட்டும்தான் நமது தொழில்ச்சாலை முதலாளிகள் பிறகு பார்த்துக்கொள்ளலாம் என்று தள்ளிப் போட்டிருக்கிறார்கள் என்று எண்ணிக் கொள்ளவேண்டாம். மூலத் தொழில்கள் அரசாங்கத்துக்கே சொந்தமாயிருக்கவேண்டும், அரசாங்கமே அவைகளை நிர்வகித்துவரவேண்டும் என்கிற அடிப்படையான விஷயத்தையும் அவர்கள் எதிர்கால ஆராய்ச்சிக்கென்று தள்ளிப்போட்டுவிட்டார்கள். செல்வத்தை நியாயமான முறையில் விநியோகிப்பது, மூலத்தொழில்களை அரசாங்கத்துக்கே சொந்தமாக்கி, அரசாங்கத்தின் நிர்வாகத்துக்கு உட்படுத்துவது ஆகிய இவ்விரண்டு விஷயங்களும் பொதுமக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தும் வண்ணம் தயாரிக்கும் எந்தத் திட்டத்திலும் முதன்மை ஸ்தானம் பெறவேண்டும் என்பது வெளிப்படை. இவை யிரண்டும் முன்னேற்ற நோக்கத்தோடு அமைக்கும் பொருளாதாரத் திட்டத்திற்கு உயிர்நாடி போன்றவை என்று சொல்லிவிடலாம். இவை யிரண்டு விஷயங்களையும் பொறுக்கி எடுத்து, இவைகளைப் பிறகு பார்த்துக் கொள்ளலாம் என்று நமது தொழில்ச்சாலை முதலாளிகள் சொல்வது ரொம்ப வேடிக்கையாக இருக்கிறது. முதலாளித்துவ முறையில் ஒருபக்கம் செல்வம் மலையாகக் குவிகிறது; இன்னொரு பக்கம் வறுமை தாண்டவமாடுகிறது; பொருளாதார நெருக்கடிகளும், போரும், வேலையில்லாத் திண்டாட்டமும் அடிக்கடி ஏற்படுகின்றன என்றால், இதற்கெல்லாம் காரணம் உற்பத்திசெய்யும் பொருளைச்சமமான முறையில் விநியோகிக்காத குற்றமும், தொழில்கள் அரசாங்கத்துக்குச் சொந்தமாகி, அதன் நிர்வாகத்தின்கீழ் இல்லாத குற்றமுமே ஆகும். பொருளாதார அமைப்பில்க்காணும் இந்தக் குற்றங்களை நீக்கி, பொருளபிவிருத்தி தடையின்றி ஆற்றொழுக்குப் போலச் செல்லவேண்டும், அதோடு பொதுமக்களின் வாழ்க்கை நிலையும் உயரவேண்டும் என்கிற ஒரே எண்ணம்தான் பொருளாதாரத் திட்டங்களைப் போடும்படி நம்மைத் தூண்டுகிறது. இந்த நோக்கத்தோடுதான் நமது தொழில்ச்சாலை முதலாளிகளும் தங்கள் திட்டத்தைத் தயாரித்திருப்பதாகச் சொல்லுகிறார்கள். அவர்கள் சொல்லுவது உண்மையானால், இவ்விரண்டு உயிர்நாடியான விஷயங்களையும் அசிரத்தையாகப் பிறகு பார்த்துக் கொள்வதற்காகத் தள்ளிப் போட்டது பெரிய தவறாகும். "பருப்பில்லாமல் கலியாணமா?" என்பார்கள். ஆயினும், நமது தொழில்ச்சாலை முதலாளிகள் பெண்ணில்லாமலே கலியாணம் செய்யப் பார்க்கிறார்கள். முதலாளித்துவ முறையின் கண்மூடித்தனமான போக்கினால் மனித சமுதாயம் இல்லாத துன்பங்களுக்கெல்லாம் இலக்காகி லட்சக்கணக்கான இளைஞர்களை ரத்தப் பலி கொடுத்துக் கொண்டிருக்கும் இந்த சமயத்திலும், அரசாங்கத்தின் கட்டுப்பாட்டில்லாமல் சொந்த முதலாளிகளின் பார்வையிலே பொருளாதார அபிவிருத்திக்குத் திட்டம் போடுவதற்கு அதிகத் துணிச்சல்வேண்டும். மனித சமுதாய அமைப்பை எப்படி மாற்றியமைப்பது என்று உலக மக்கள் தத்தளித்துக் கொண்டிருக்கும் இந்தச் சமயத்தில், அதை மாற்றியமைக்காத முறையில் கல்லும் சாந்தும் போட்டு விட்டு விடுவதென்று முன்வந்த நமது தொழில்ச்சாலை முதலாளிகளின் நெஞ்சழுத்தத்தைக் கண்டு நாம் வியக்காமலிருக்க முடியவில்லை.

இந்தியத் தொழில்கள், சிறப்பாக மூலத் தொழில்கள், யாருக்குச் சொந்தமாயிருக்கவேண்டும், யாருடைய கட்டுப்பாட்டின் கீழ் இருக்க வேண்டும் என்கிற பிரசினையைத் தீர்க்காமல், தொழிலபிவிருத்திக்காகத் திட்டம் போடுவது சாத்தியமான காரியமா? சில தொழில்களைக் கட்டுப்படுத்த வேண்டும், சில தொழில்களை அரசாங்கமே எடுத்துக்கொண்டு நடத்தவேண்டும் என்பதற்காகவே திட்டம் போடுகிறோம். முன்போல

முதலாளிகளே தங்கள் விருப்பப்படி நடத்துவதற்குத் திட்டம் எதற்கு, ஒத்துழைப்பு எதற்கு என்று நமக்குப் புரியவில்லை.

செல்வத்தை அதிகமாக உற்பத்தி செய்வதனால் மட்டும் ஜனங்களின் அடிப்படையான தேவைகளைப் பூர்த்தி செய்துவிடலாம் என்று நம்பியிருக்கமுடியாது. புதிதாக உண்டாக்கிய செல்வத்தை விநியோகிப்பது மிக முக்கியமான விஷயம். உற்பத்தியிலிருந்தோ, புதிதாக அமைக்கிற பொருளாதாரத் திட்டத்திலிருந்தோ விநியோகப் பிரசினையைப் பிரித்துவிட முடியாது. சொந்தச் சொத்துரிமையையும் லாப எண்ணத்தையும் அடிப்படையாகக்கொண்டு கண்மூடித்தனமாகக் காரியங்களை நடத்துவதை ஒரு சிறிதும் கட்டுப்படுத்த விரும்பாத பொருளாதாரமுறை விநியோகப் பிரசினையை ஒருநாளும் திருப்திகரமாகத் தீர்த்துவைக்க முடியாது. அதற்கு மாறாக, விநியோகப் பிரசினையைத் தீர்த்துவைக்க முடியாத பொருளாதார அமைப்பில் உற்பத்தித் தொழிலை நடத்துவதே ஒரு பெரிய பிரசினையாக மாறிவிடுகிறது. ஏனெனில் உற்பத்தி செய்கிற பொருள்களுக்குத் தேவையும் அழிவும் விரிந்துகொண்டு போனால் அன்றி, உற்பத்தித் தொழிலை விரிக்க முடியாது. அது காரணமாகவே, பொதுமக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தும் வண்ணம் உற்பத்தியை அதிகமாக்குவதென்று திட்டம் போட்டால், அந்தத் திட்டத்தை இப்போதிருக்கிற பொருளாதார அமைப்பின் உதவியைக் கொண்டு நிறைவேற்றிவைக்க முடியாது. அதை நிறைவேற்றுவதற்குப் பொருளாதார அமைப்பில் சில அடிப்படையான மாற்றங்களை ஏற்படுத்தியாக வேண்டும். நாட்டின் பாதுகாப்புக்கு அவசியமான தொழில்கள், மூலத்தொழில்கள், பொதுஜன உபயோகத்துக்காக ஏற்பட்டிருக்கும் (ரயில்வே கம்பெனி, டிராம்வே கம்பெனி, மின்சார சப்ளைக் கம்பெனி போன்றவை) தொழில்கள் ஆகிய இவையாவும் அரசாங்கத்துக்கே சொந்தமாக இருக்கவேண்டும். அவைகளை நடத்துகிற பொறுப்பும் கட்டுப்படுத்துகிற பொறுப்பும் அரசாங்கத்தையே சார்ந்ததாக இருக்க வேண்டும். இதர தொழில்களைச் சொந்த முதலாளிகளே வைத்துக் கொள்ளும்படி விட்டுவிடலாம். ஆனால் இந்தத் தொழில்களையும் பொதுவாகக் கண்காணிக்கவும் கட்டுப்படுத்தவும் உள்ள உரிமை அரசாங்கத்துக்கு இருக்கவேண்டும். இந்தத் தொழில்களிலும் முதலாளிகள் கொள்ளை லாபம் தட்டும்படி விட்டுவிடக்கூடாது. ஏனெனில், நியாயமான விலைக்குப் பொது ஜனங்கள் கைக்கு அழிபண்டங்கள் போய்ச்சேருவதற்கு அது தடையாயிருக்கும். ஆகையால் இன்ன சாமானை இன்ன விலைக்குமேல் விற்கக்கூடாது என்று அரசாங்கம் கட்டுப்படுத்தி அந்தக் கட்டுப்பாட்டைத் திறமையாக அமுல் நடத்தவேண்டும்.

இந்த மாற்றங்கள் அவசியமானவை என்பதற்கு இன்னொரு முக்கியமான காரணமும் இருக்கிறது. வருஷா வருஷம் பொதுமக்களின் தேவைகளைப் பூர்த்தி செய்த பிறகு கிடைக்கிற அதிகபடியான செல்வத்தைத் திரும்பவும் பொருளாதார முன்னேற்றத்திற்காக உபயோகப்படுத்த இது உதவி செய்யும். இந்த அதிகப்படியான செல்வம் அரசாங்கத்தின் கைக்குப் போய்ச் சேர்ந்தால்த்தான், திரும்பவும் அதைத் தொழிலில்ப்போடுவது சாத்தியமாகும். அப்படியல்லாமல் லாபம் என்கிற பெயரில் தனி முதலாளிகளின் கையில் அதுபோய்ச் சேர்ந்துவிடுமானால், அதைத் திரும்பவும் தொழிலில்ப் போடும்படி செய்வது மிகவும் கஷ்டமான விஷயம். லாபம் அதிகமாக வந்தாலொழிய முதலாளிகள் தங்கள் பணத்தை தொழிலில் போடமுன்வரமாட்டார்கள். ஆதலால், பொருளாதார முன்னேற்றத்தை விரும்பும் எந்த நாடும் இந்த அதிகப்படியான செல்வம் தனிப்பட்ட சிலருடைய கைக்குப் போகாத வண்ணம் கட்டுப்படுத்துவது மிகவும் அவசியமாகிறது. லாபம் என்கிற எண்ணத்தை ஒழித்துப் பொதுமக்களின் சுபிட்சத்திற்காகப் பொருளை உற்பத்திசெய்யவேண்டும். அதற்கு, குறைந்த பட்சம் மேலே சொன்ன மாற்றங்கள் ஏற்பட்டு ஆகவேண்டும். பொதுமக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்காகப் போடும் எந்தத்

திட்டத்திலும் அவசியமான இந்த மாற்றங்களைப் பற்றிக் குறிப்பிடாம லிருக்க முடியாது. அதுகாரணமாகவே ஜவஹர்லால் தலைமையைக் கொண்ட தேசியத் திட்டக் கமிட்டி கீழ்வருமாறு அறிவித்தது:

“நாட்டின் பாதுகாப்பான தொழில்கள் அரசாங்கத்துக்கு சொந்தமா யிருப்பதோடு, அரசாங்கத்தின் கட்டுப்பாட்டிலேயே நடந்து வரவேண்டு மென்பது ஏகமனதாக முடிவு செய்த காரியம். மூலத்தொழில்களும் அரசாங்கத்துக்கே சொந்தமாயிருக்கவேண்டு மென்பது பெரும்பான்மை யோரின் அபிப்பிராயம். பொது வசதிகள் சம்பந்தப்பட்ட தொழில்கள் அரசாங்கத்தின் அங்கமாக அமைந்திருக்கும் ஏதாவது ஒரு ஸ்தாபனத்துக் குச் சொந்தமா யிருக்கவேண்டும். இதர முக்கியமான தொழில்கள் யாருக்குச் சொந்தமாயிருக்க வேண்டுமென்பதைப்பற்றி இன்னும் தீர்க்க மாக ஒரு முடிவுக்கும் வரவில்லை. ஆனால், திட்டப்படுத்துவது என்பதே ஓரளவு அவைகளைக் கட்டுப்படுத்துகிற அவசியத்தைக் குறிக்கிறது என்று எல்லோரும் அபிப்பிராயப் பட்டார்கள்.”

நாம் ‘அரசாங்கம்’ என்று மேலே சொல்லி வந்திருப்பது பிரிட்டிஷ் ஏகாதிபத்திய அரசாங்கத்தையோ, வேறு ரகமான சர்வாதிகார அரசாங் கத்தையோ அன்று. அது சுதந்திரமான இந்திய மக்களின் அரசாங் கத்தையே குறிக்கிறது.

நமது தொழில்த் தலைவர்கள் 15 வருஷ காலத்தில் தொழில் மூலம் இப்போது கிடைக்கும் வருமானத்தை 5 மடங்கு அதிகமாக்க வேண்டு மென்று விரும்புகிறார்கள். ஆனால், சமுதாயமே ஒன்று சேர்ந்து செய்ய வேண்டிய காரியம் இது. தனித்த முதலாளிகளால் மட்டும் இதைச்செய்ய முடியாது என்பதை அவர்கள் மறந்துவிடுகிறார்கள். மூலத் தொழில்கள் பொது ஜனங்களின் சொத்தாக இருப்பதோடு அவர்களுடைய கண் காணிப்பிலேயே இருந்தால் மட்டுமே இவ்வளவு பெரிய காரியத்தைச் சாதிக்க முடியும். முதலாளிகளின் போக்கின்படி விட்டால் பொருளாதார அபிவிருத்திக்குப் பதிலாக பொருளாதார நெருக்கடிதான் ஏற்படும் என் பதையும் அவர்கள் மறந்துவிடுகிறார்கள்.

## 6. விவசாயம்

நமது தொழில்ச்சாலை முதலாளிகள் போட்டிருக்கிற திட்டப்படி, மூலத் தொழில்களையும் இதர தொழில்களையும் அபிவிருத்தி செய்யவேண்டும் என்றால், நமது விவசாய வாழ்க்கையையும் திருத்தியமைப்பது அவசியமா கிறது. இன்றைய இந்திய விவசாயம் சீர்கெட்ட நிலையில் இருப்பது எல் லோருக்கும் தெரிந்த விஷயம். பிரிட்டிஷ் ஆட்சி இந்தியாவில் ஏற்படு முன், நிலம் குடியானவர்களுக்கே சொந்தமாக இருந்தது. பண்டைக் காலத்து நமது ராஜாக்கள் நிலத்தில் விளையும் தானியத்தில் ஆறில் ஒரு பங்கை வரியாகப் பெற்றுக்கொள்வதோடு திருப்தியடைந்தார்கள். மொக லாய சாம்ராஜ்யம் இந்தியாவில் ஏற்பட்ட காலத்தில் ஆறில் ஒரு பங்கு என்பதை மூன்றில் ஒரு பங்காக உயர்த்தினார்கள். இந்தச் சிறு மாற் றத்தைத் தவிர மொகலாய ஆட்சி இந்திய விவசாயப் பொருளாதாரத்தில் வேறு எந்த மாற்றத்தையும் செய்யவில்லை.

மொகலாய ஆட்சியின் பிடி தளர்ந்த காலத்தில், வரி வசூலிப்பதற்காக நியமித்த மொகலாய அரசாங்க உத்தியோகஸ்தர்கள் சுயநல வெறியர் களாகித் தங்கள் மனம்போனபடி குடியானவர்களைத் துன்புறுத்தி வரி வசூலிக்க ஆரம்பித்தார்கள். சில இடங்களில் அவர்கள் வருஷ விளைவில் பாதிவரைகூட வசூலித்தார்கள். அரசாங்கம் சிதைந்துபோன காரணத்தி னால், அவர்கள் ஆங்காங்கே தங்கள் ஆதிக்கத்தை ஸ்தாபித்துக்கொண்டு குட்டி ராஜாக்கள் போலிருந்து வந்தார்கள்.

இந்த நிலையில் இந்தியாவில் பிரிட்டிஷ் ஆதிக்கம் ஏற்பட்டது. பிரிட்டிஷ் அரசாங்கம் மொகலாய அரசாங்க உத்தியோகஸ்தர்கள் குடியானவர்களைக் கொடுமை புரிந்து வரிவசூலித்த முறையை அப்படியே ஏற்றுக்கொண்டது. அந்த அளவு வரியோடாவது அது திருப்தியடைந்ததா என்றால், இல்லை. வர வர வரியை அதிகரித்துக்கொண்டே சென்றது. வரியை அதிகப் படுத்திக் கொண்டு போவதென்றால் குடியானவர்களைக் கொடுமைப்படுத்து வது என்று தான் பொருள். வரியை அதிகப்படுத்துவது ரொம்ப விரும் பத்தகாத காரியம்தான். ஆனால் பிரிட்டிஷ் ஆட்சியின் பலன் இதோடு நின்றுவிடவில்லை. நமது விவசாய அமைப்பு முறையிலேயே ஒரு பெரிய புரட்சியை அது கொண்டுவந்து விட்டது. வருஷா வருஷம் விளைகிற விளை வில் ஒரு பகுதியைப் பெறுவதற்குப் பதிலாக, விளைந்தாலும் சரி, விளையா விட்டாலும் சரி, ஒரு குறிப்பிட்ட அளவு வரியைக் கொடுத்துவிடவேண்டும். அதையும் தானியமாகக் கொடுக்காமல் ரொக்கமாகக் கொடுத்துவிட வேண்டும் என்று பிரிட்டிஷ் அதிகார வர்க்கத்தார் சட்டம் செய்தார்கள். இந்த வரியை வசூலிக்க அரசாங்கத்தார் நியமித்த ஆசாமிகளே பிற்காலத் தில் நிலச்சுவான்தார்கள், ஜமீன்தார்கள் என்ற கௌரவமான அந்தஸ்தை அடைந்தார்கள். இப்படி வசூலித்த பணத்தை வரி என்று குறிப்பிடாமல், வாடகை அல்லது சேவா என்று குறிப்பிட ஆரம்பித்தார்கள். வாடகை என்று சொன்னால் நிலம் குடியானவர்களுக்குச் சொந்தமில்லை, அரசாங்கத் துக்கோ, அரசாங்கத்தார் வரி வசூலிக்க நியமித்த ஆசாமிகளுக்கோ தான் சொந்தம் என்று ஆகிவிடுகிறதல்லவா?

நமது பண்டைய விவசாய அமைப்பில் குடியானவர்கள் எவ்வளவு தான் கடன்பட்டிருந்தாலும் நிலத்தை ஒத்திவைக்கவோ, விற்கவோ உரிமை இல்லை என்று இருந்தது. அது காரணமாக அவர்களுக்குக் கடன் கொடுப்பதற்கு யாரும் முன்வரவில்லை. அப்படியே கடன் கொடுத் திருந்தாலும், அதன் காரணமாகக் குடியானவர்களின் வாழ்க்கை சீர் குலைந்து போகவில்லை. ஆனால், பிரிட்டிஷ் அதிகாரவர்க்கத்தார் கடனுக் காக நிலத்தை ஒத்திவைக்கலாம், விற்கலாம் என்ற சட்டத்தைப் பிறப்பித்து விட்டார்கள்.

நிலம் பிரிட்டிஷ் அதிகார வர்க்கத்தாரின் அரசாங்கத்துக்குச் சொந்தம். குடியானவர்களிடம் வாடகைக்கே நிலத்தை விட்டிருக்கிறது. வாடகையைக் கொடுக்காவிட்டால், நிலத்திலிருந்து அவர்களை அப்புறப்படுத்திவிடலாம் அல்லது அவர்களுக்குப் பதிலாக நிலச்சுவான்தார்கள் என்றபெயரில் தாங்கள் நியமிக்கும் ஆசாமிகளிடம் அந்த நிலத்தைவிடலாம். நிலச்சுவான் தார்கள் வாடகையை ஒழுங்காகச் செலுத்தாவிட்டால், அவர்களையும் நிலத் திலிருந்து அப்புறப் படுத்தலாம். பிரிட்டிஷ் ஆட்சியினால் நமது விவசாய அமைப்பில் ஏற்பட்ட புரட்சி இதுதான். இந்தப் புரட்சியின் காரணமாக, நிலத்துக்குச் சொந்தக்காரர்களாக இருந்த குடியானவர்கள், வாடகைக்கு நிலத்தை உழுபவர்களாக மாறி விட்டார்கள். ஆனால், அதே சமயத்தில், கடன்படுவது, ஒத்திவைப்பது என்கிற விஷயங்களில் சொந்தக்காரர்கள் அனுபவிக்கும் துன்பங்களையெல்லாம் அவர்கள் அநுபவிக்கும்படியாயிற்று. பெரும்பாலான குடியானவர்கள் கடனுக்கு ஆளாகி, இறுதியில் விவசாயக் கூலிகளாக மாறிய கதையைத்தான் மேலே சொன்ன விஷயங்கள் கூறு கின்றன.

நமது விவசாய வாழ்க்கையில் ஏற்பட்ட இந்தச் சீர்கேட்டின் காரண மாக, பிரிட்டிஷ் இந்தியாவிலிருக்கும் 57½ கோடி ஏக்கர் விளை நிலத்தில் 18·8 கோடி ஏக்கர் நிலம் நிரந்தரமான ஜமீன்தார்கள் கையிலும், 19·7 கோடி ஏக்கர் நிலம் தற்காலிகமான ஜமீன்தார்கள் கையிலும், 19 கோடி ஏக்கர் நிலம் சொந்தக் குடியானவர்கள் கையிலும் இருக்கிறது. சொந்தக் குடியானவர்கள் கையிலுள்ள இந்த 19 கோடி ஏக்கர் நிலத்தில் 40% அதா வது, 7·6 கோடி ஏக்கர் நிலம் கடனுக்காகக் கைமாறிவிட்டது. எனவே,

57½ கோடி ஏக்கர் நிலத்தில் 46·1 கோடி ஏக்கர் நிலம் அதாவது 80% குடியானவர்களல்லாத ஜமீன்தார்கள், நிலச்சுவான்தார்கள் கையிலிருக்கிறது. இவர்கள் எப்படிப்பட்டவர்கள்? பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் இந்திய மண்ணில் நிலைபெற்று நிற்பதற்காக பிரிட்டிஷ் அதிகார வர்க்கத்தார் சிருஷ்டித்துவிட்ட பிரகிருதிகள் இவர்கள். தங்கள் முதலாளியாகிய பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திற்கு இவர்கள் இன்று வரையிலும் உண்மையாக நடந்து வந்திருக்கிறார்கள். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் கருவிகளாக இருக்கும் இவர்கள் இந்திய முன்னேற்றத்திற்குத் தடையாக இருப்பார்கள், இருக்கிறார்களென்பது சொல்லாமலே தெரியக்கூடிய விஷயம். இந்திய விவசாயத்தைச் சீர்திருத்துவதற்கும், அபிவிருத்திசெய்வதற்கும் இவர்கள் பெரிய முட்டுக்கட்டையாக இருக்கிறார்கள். இந்திய விவசாயம் உருப்படியாகவேண்டும் என்றால் இந்த நிலச்சுவான்தார் வர்க்கம் மறையவேண்டும்.

இந்தியாவின் விவசாய வாழ்க்கையைச் சீர்குலைக்க இந்த நிலச்சுவான்தார் முறை ஒன்றே போதுமானது. ஆனால், இவர்கள் மட்டும் போதாது என்பதுபோல, இன்னொரு கூட்டத்தாரும் இவர்களோடு சேர்ந்து கொண்டார்கள். குடியானவர்களுக்கு, ஏன் நிலச்சுவான்தார்களுக்கே, கடன் கொடுக்கும் பண முதலாளிகளைப் பற்றித்தான் நாம் குறிப்பிடுகிறோம். போர் துவங்குமுன், நமது விவசாயக் கடன் ரூ. 1200 கோடியாயிருந்தது என்று கணக்கிடப்பட்டிருக்கிறது. ரிஸர்வ் பாங்கின் விவசாயக்கடன் இலாக்கா இதை ரூ. 1800 கோடி என்று மதிப்பிட்டிருக்கிறது. இந்தக் கடன் தொகை இப்போது குறைந்து போயிருக்குமென்று சிலர் எண்ணுகிறார்கள். ஆனால், அப்படியொன்றும் அதிகமாகக் குறைந்து போகக் காரணம் இருப்பதாகத் தெரியவில்லை. இந்தக் கடன் சுமை நமது குடியானவர்களைத் தலைதூக்கமுடியாதபடி அமுக்கிக்கொண்டிருக்கிறது. பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் தூண்களாக அமைந்திருக்கும் நாட்டின் 80 சதவிகிதமுள்ள நிலத்தை வைத்திருக்கிற நிலச்சுவான்தார்களும், ரூ. 1800 கோடி விவசாயக் கடனும் இருந்தால் எந்தநாட்டின் விவசாய வாழ்க்கை தான் சீர்குலைந்து போகாது? இவைகளை வைத்துக்கொண்டு இந்தியா விவசாயத் துறையில் முன்னேற முடியுமா? விவசாயத் துறையில் முன்னேற முடியாத இந்தியா, தொழில்த் துறையில்த்தான் முன்னேறிவிட முடியுமா? ஒருநாளும் முடியாது. நிலச்சுவான்தார் முறையும் ஒழிய வேண்டும். விவசாயக் கடனும் ஒழிய வேண்டும். அப்போதுதான் இந்தியாவுக்கு விமோசனம் உண்டு.

ஆயினும் இந்தியப் பொருளாதார அபிவிருத்திக்காகத் திட்டம்போடும் நமது தொழில்ச்சாலை முதலாளிகள் என்ன சொல்லுகிறார்கள்? வாய்க்கால் வெட்டவேண்டும், வயலின்மீது படிந்திருக்கும் வண்டலை மழைநீர் அடித்துக்கொண்டு போகாதபடி வரப்புகளை உயர்த்தவேண்டும், உரம் போடவேண்டும், நல்ல ரகமான விதைகளை விதைக்க வேண்டும், துண்டு நிலங்களை ஒன்று சேர்க்க ஏதாவது செய்யவேண்டும் இவைகள்தான் இந்திய விவசாயத்தை அபிவிருத்தி செய்ய அவர்கள் கூறும் ஆலோசனை. இவைகளைச் செய்வதனால் 15 வருஷ காலத்தில் விவசாய வருமானத்தை 30 சதவிகிதம் அதிகப்படுத்தி விடலாம் என்று அவர்கள் எண்ணுகிறார்கள்.

புதிய விஞ்ஞான முறைகளின்மூலம் நிலத்தைப் பண்படுத்தி விவசாயத்தை அபிவிருத்தி செய்வதற்குப் பெரிய தடங்கலாக இருப்பது நிலச்சுவான்தார்கள் என்பதை இவர்கள் அறியாதவர்கள் அல்ல. ஆனால், சொந்தச் சொத்துரிமையில் கைவைக்கும் எந்தக் காரியத்தையும் இவர்கள் விரும்பவில்லை. நிலச்சுவான்தார்கள் அப்படியே இருக்கவேண்டும். அவர்களுக்கு எந்தவிதமான பாதகமும் ஏற்படாத முறையில் இந்திய விவசாயத்தை அபிவிருத்தி செய்யவும் வேண்டும். இதுதான் நமது தொழில் முதலாளிகளின் எண்ணம். நிலச்சுவான்தார்கள் குடியானவர்களைச் சித்திரவதை செய்து ஒன்றுக்கு இரண்டாகக் கிஸ்தி வசூலிக்கும் விஷயத்

தைப் பற்றிய பேச்சையே அவர்கள் எடுக்கவில்லை. அதற்குக் காரணம் சொத்துரிமைக்கு அவர்கள் வைத்திருக்கும் மரியாதை தான். எனவே, சொந்த நிலத்தை வைத்திருக்கும் குடியானவர்களைப் பற்றியேதான் அவர்கள் பேசுகிறார்கள்.

விவசாயக் கடனை ஒழிக்க அவர்கள் கூறும் ஆலோசனை ரொம்ப வேடிக்கையானது. கூட்டுழைப்புச் சங்கங்களை நிறுவி விவசாயக் கடன் பிரசினையைத் தீர்க்க வெண்டுமென்று அவர்கள் கூறுகிறார்கள். ஆனால், இந்தக் கூட்டுழைப்புச் சங்கங்களுக்குப் பணம் எங்கிருந்து வரும்? ஏன், விவசாயிகளுக்குக் கடன் கொடுத்திருக்கிற அதே ஆசாமிகளிடமிருந்து தான். விவசாயிகளுக்கு நேர் முறையில் கடன் கொடுப்பதற்குப் பதிலாக, கூட்டுழைப்புச் சங்கங்களின் மூலம் கடன் கொடுக்கவேண்டும். அப்படிக் கடன் கொடுத்தால், விவசாயக்கடன் தீர்ந்துபோய்விடும். "கூட்டுழைப்புச் சங்கங்களுக்குத் தேவைப்படுகிற பணத்தைப்பற்றி இந்தத் திட்டத்தில் குறிப்பிடாததற்குக் காரணம் விவசாயிகளின் கடன் இன்னொரு வர்க்கத்தாரின் சேமிப்பேயன்றி வேறல்ல. இந்தச் சேமிப்பு நேரடியாகவோ, மறைமுகமாகவோ கூட்டுழைப்புச் சங்கங்களுக்கு எப்படியாவது கிடைத்துவிடும்" என்று அவர்கள் சொல்லுவதற்கு வேறு என்ன அர்த்தம் இருக்கமுடியும்?

இந்தியக் குடியானவனுடைய நிலைமையை அபிவிருத்தி செய்யப் பிரிட்டிஷ் ஏகாதிபத்திய வாதிகள் என்ன சொல்லுவார்களோ அதேமாதிரி தான் நமது தொழில்ச்சாலை முதலாளிகளும் ஆலோசனை கூறுகிறார்கள். சொத்துரிமை சம்பந்தத்தில் ஒரு மாற்றத்தையும் உண்டாக்காமல் இந்தியக் குடியானவனைக் கைதூக்கிவிட விரும்புகிறார்கள் இவர்கள். நிலச்சுவான் தார்கள் அப்படியே இருக்கவேண்டும். விவசாயிகளைக் கடனுக்களாக்கி அடிமைப்படுத்தி வைத்திருக்கும் ஆசாமிகளைக் கூட்டுழைப்புச் சங்கங்களுக்குக் கடன் கொடுக்கச் சொல்லி, அவற்றின் டைரக்டர்களாக மாற்ற வேண்டும். பிறகு, எல்லாம் சரிப்பட்டுவிடும். இந்தியா விவசாயத்திலிருந்து இப்போதிருப்பதைவிட 100-க்கு 30 பங்கு அதிகமான லாபத்தை அடைந்து விடலாம் என்று இவர்கள் சொல்லுகிறார்கள்! இதற்கு ரூ. 1240 கோடி பொதுஜனங்களின் பணத்தைச் செலவழிககவேண்டுமாம்.

சொந்தச் சொத்துரிமையில் தங்களுக்குள்ள ஈடுபாட்டினால் திட்டத்தின் ஆசிரியர்கள் இம்மாதிரி அர்த்தமற்ற ஆலோசனைகளைக் கூறியிருக்கிறார்கள். இந்திய விவசாயத்துக்கு விமோசனம் ஏற்படவேண்டும், இந்தியக் குடியானவனைக் கைதூக்கி விடவேண்டும் என்றால், நிலச்சுவான்தாரை அடிப்படையாகக் கொண்ட உளுத்துப்போன விவசாய முறை ஒழிந்து அதற்குப் பதிலாக விஞ்ஞான முறையில் உழுது பயிரிடும் பெரிய கூட்டுப் பண்ணைகளை அடிப்படையாகக் கொண்ட விவசாய அமைப்பை உருவாக்குவதற்குரிய ஆலோசனையைக் கூறுவதற்குப் பதிலாக வாய்க்கால் வெட்டவேண்டும், மண்ணை மழைத் தண்ணீர் அடித்துக்கொண்டு போய்விடாமல் வரப்புக் கட்ட வேண்டும் என்று நமது தொழில்த் தலைவர்கள் சொல்லுகிறார்கள். வாய்க்கால் வெட்டுவது, வரப்புக் கட்டுவது, உரம் போடுவதுபோன்ற விஷயங்கள் முக்கியமானவை அல்ல என்று நாம் சொல்ல வரவில்லை. ஆனால் நிலச்சுவான்தார்களிடமிருந்தும் கடனிலிருந்தும் நிலத்தை மீட்டாலொழிய இந்தச் சீர்திருத்தங்களால் எவ்வித பயனும் ஏற்பட முடியாது என்பதையே நாம் வற்புறுத்த விரும்புகிறோம். இந்த விஷயத்தில் தேசியத் திட்டக் கமிட்டியின் கீழ் நியமிக்கப்பட்ட நிலக்கமிட்டி சந்தேகத்திற்கு இடமின்றி ரொம்பத் தெளிவாகச் சொல்லி யிருக்கிறது:

"விவசாய நிலம், மலை, சுரங்கம் முதலிய இயற்கையின் செல்வங்களெல்லாம் இந்தியமக்களின் பொதுச் சொத்தாகவே இருக்கவேண்டும். புதிய பொருளாதார முறைக்கு நாம் மாறிய பிறகு பொதுஜனங்களுக்கும் குடியானவர்களுக்கும் இடையிலிருக்கும் தாலுக்தார், ஜமீன்தார் போன்ற மத்திய வர்க்கத்தாருக்கு அதில் இடமிருக்கக் கூடாது."

நிலச்சுவான்தார் முறையை ஒழித்து, துண்டுபட்ட நிலங்களை ஒன்று சேர்த்துப் பெரிய கூட்டுப்பண்ணை முறையைக் கையாண்டு, கூட்டுழைப்புப் பாசனவசதிகளை ஏற்படுத்தி, விஞ்ஞான முறையில் விவசாயத்தைப் புனர் நிர்மாணம் செய்தாலொழிய, நமது விவசாயத்தில் அபிவிருத்தி ஏற்படப்போவதில்லை. விவசாயத்தில் அபிவிருத்தி ஏற்படாதவரையில் தொழில் முறையில் இந்தியா சிறந்துவிடப்போவதுமில்லை. ஏனெனில் தொழிலபிவிருத்தியும் விவசாய அபிவிருத்தியும் ஒன்றையொன்று நம்பியிருக்கின்றன. பெரும்பான்மையான இந்திய மக்கள் விவசாயத்தில் ஈடுபட்டிருக்கிறார்கள். விவசாயத்தில் அபிவிருத்தி ஏற்பட்டு, அவர்கள் கைக்கு இரண்டு காசு போய்ச் சேர்ந்தாலொழிய நமது தொழிற்சாலைகளில் உற்பத்தியாகும் சாமான்களை அவர்களால் வாங்க முடியாது. சாமான்கள் விலையாகவில்லையென்றால், தொழிற்சாலைகள் இயங்க முடியாது. பிறகு தொழிலில் அபிவிருத்தி ஏற்படுவது எப்படி?

திட்டத்தின் ஆசிரியர்கள் 15 வருஷ காலத்தில் தொழிலில் 5 மடங்கு அபிவிருத்தி ஏற்படவேண்டுமென்று கூறுகிறார்கள். உற்பத்தி செய்கிற சாமான்களை வாங்குவதற்கு இந்திய மக்களில் பெரும்பகுதியினரான இந்தியக் குடியானவர்களிடம் சக்தி இல்லையென்றால், தொழிலபிவிருத்தி எப்படி ஏற்பட முடியும்? எனவே, மூலத் தொழில்கள் இந்தியாவில் தொடர்ந்து நடைபெறுமா, மாட்டாதா என்பதை முடிவுசெய்யப்போகிறவர்கள் குடியானவர்களே. நிலச்சுவான்தாருக்கும் பண முதலாளிக்கும் அவர்களை அடிமையாக்கி வைத்திருந்தால், அவர்கள் வறுமைக்குட்பட்டு, உற்பத்தி செய்கிற சாமான்களை வாங்க முடியாதவர்களாகப் போய்விடுவார்கள். வாங்குகிற சக்தியற்றவர்களாக இருக்கிற காரணத்தினாலேயே தொழில்முன்னேற்றம் ஏற்படாதபடி அவர்கள் தடுத்துவிடுவார்கள். நிலச்சுவான்தாரிட மிருந்தும், கடனிலிருந்தும் அவர்களை விடுதலைசெய்தால், அவர்கள் அதிகமான விவசாயப் பொருளை உற்பத்தி செய்யமுடியும். அதன் காரணமாக அவர்கள் கைக்கும் அதிகமான பணம் போய்ச்சேரும். கையில் பணமிருக்கிறபடியால் தொழிற்சாலையில் உற்பத்தியாகிற சாமான்களை வாங்குகிற சக்தி அவர்களுக்கு ஏற்படும். எனவே, தொழிலும் அபிவிருத்தி அடையும்.

தங்கள் சாமான்களை விற்பதற்குச் சந்தைகளைப் பிடிப்பதற்கு உலக வல்லரசுகள் பெரிய பெரிய யுத்தங்களையெல்லாம் நடத்துகின்றன. ஆனால் நமக்கோ அந்தக் கவலையில்லை. நமது நாட்டு மக்கள் எல்லோரும் சாமான்கள் வாங்கினாலே போதும். நமது நாட்டு மக்களில் பெரும்பான்மையானவர்கள் குடியானவர்கள். ஆகையால், நமது தொழிற்சாலைகளில் உற்பத்தியாகும் சாமான்களை விற்பதற்குச் சரியான சந்தை நமது குடியானவர்களே. நிலச்சுவான்தார்களுக்குப் பயந்து, திட்டத்தின் ஆசிரியர்கள், நமது குடியானவர்களின் சந்தையை இழந்துவிடத் தயாரா யிருக்கிறார்கள். இவ்வளவு அருமையான சந்தையை இழந்த பிறகும் 500 சதவிகிதம் தொழிலுற்பத்தியை அதிகப்படுத்த எண்ணுகிறார்கள். சொந்தச் சொத்துரிமையில் கை வைக்கக்கூடாது. ஆனால் தொழிலுற்பத்தியில் அபாரமாக முன்னேறிவிட வேண்டும். கூழுக்கும் ஆசை, மீசைக்கும் ஆசை!

## 7. பொதுஜனங்களின் பாங்கு

இந்தத் திட்டத்தில் குறிப்பிட்டிருக்கிறபடி தொழிலிலும் விவசாயத்திலும் அபிவிருத்தி ஏற்படவேண்டும் என்றால், பாங்குகள், கொடுக்கல் வாங்கல் தொழிலில் ஈடுபட்டிருக்கும் இன்னும் பலரகமான ஸ்தாபனங்கள் ஆகிய இவைகளின் பிரவிருத்திகளை பொதுமக்களின் அரசாங்கம் கட்டுப்படுத்தவேண்டும்.

இந்தியாவில் பெரிய ஜாயின்ட் ஸ்டாக் பாங்குகள் வெகு குறைவு. 22 கோடி ஜனத்தொகையுள்ள ஐக்கிய அமெரிக்காவில் பல ரகமான கொடுக்கல் வாங்கல் தொழிலில் ஈடுபட்டிருக்கும் பாங்குகளின் எண்ணிக்கை 17000 ஆகும். அதாவது சுமார் 12950 பேருக்கு ஒரு பாங்கு. 40 கோடி மக்களுள்ள இந்தியாவில் 5 லட்சத்துக்கு மேற்பட்ட மூலதனமும் சேமிப்புமுள்ள பாங்குகள் 73 தான். பிரிட்டிஷ் இந்தியாவில் ஐந்து லட்சத்துக்குக் குறைவான ஆனால் 50,000-க்கு மேற்பட்ட மூலதனமும் சேமிப்புமுள்ள பாங்குகள் (1940-ம் வருஷப் புள்ளி விபரப்படி) 257-ம், அதற்குக் குறைந்த மூலதனமும் சேமிப்புமுள்ள பாங்குகள் 347-ம் ஆகும். சமஸ்தானங்களில் இந்த ரகத்தைச் சேர்ந்த பாங்குகள் சுமார் 250 இருப்பதாக வைத்துக் கொள்வோம். இவைகள் எல்லாவற்றையும் சேர்த்தால் 937 பாங்குகள் தான் ஆகின்றன. இவற்றை 1000 என்று வைத்துக்கொண்டாலும், 4 லட்சம் பேருக்கு ஒரு பாங்குதான் இந்தியாவில் இருக்கிறது. ஆதலால் அமெரிக்காவிலோ, இங்கிலாந்திலோ பாங்குகளின் பிரவிருத்திகளைக் கட்டுப்படுத்துவதைப்போல, இந்தியாவில் பாங்குகளைக் கட்டுப்படுத்துவது அவ்வளவு கஷ்டமா யிராது. ஆஸ்திரேலியாவில் இன்று பாங்குகளின் பிரவிருத்திகளை அரசாங்கம் கடுமையாகக் கட்டுப்படுத்தி வைத்திருக்கிறது என்று பத்திரிகைகளில் படிக்கிறோம். பழைய முதலாளித்துவ முறையைக் கையாளும் ஆஸ்திரேலிய அரசாங்கம் பாங்குகளைக் கட்டுப்படுத்தும் போது, முன்னேற்ற நோக்கத்தோடு உருவாகும் இந்தியப் பொதுமக்களின் அரசாங்கம் இந்தக் காரியத்தைச் செய்யவா முடியாது?

பாங்குகளின் பிரவிருத்திகளைக் கட்டுப்படுத்துவதுமட்டும் போதாது. கொடுக்கல் வாங்கல் முறையையே பொதுஜனங்களின் நன்மைக்கு உகந்த முறையில் மாற்றியமைக்கவேண்டும். பெரிய பாங்குகள் பங்குதாரர்களின் நன்மைக்காக நடத்தப்படுகின்றன என்று சொல்லுவது வழக்கமாயிருக்கிறது. ஆனால் உண்மையில் அவைகள் முதலாளி வர்க்கத்தாரின் நன்மைக்காகவே நடைபெற்று வருகின்றன. மற்ற தொழில்களைப் போல, பாங்குகளும் லாபத்திற்காக நடைபெறுகின்ற ஸ்தாபனங்களே. பணத்தைப் பண்டமாக வைத்து வியாபாரம் செய்கிற கடைதான் பாங்கு என்பது. பொதுஜனங்களின் நன்மைக்காகப் பாங்குகள் நடைபெறவில்லை. மற்ற தொழில்களைப் போல் பாங்குகளும் லாபத்திற்கு நடக்கும் ஸ்தாபனங்களாயிருந்தாலும், மற்ற தொழில்களுக்கு இல்லாத ஒரு விசேஷ சக்தி பாங்குகளுக்கு இருக்கிறது. பணத்தை சிருஷ்டிக்கிற சக்தியைத்தான் நாம் குறிப்பிடுகிறோம். ஆகையினாலேதான் ஒரு நாட்டின் பொருளாதாரத்திற்கே பாங்குகள் ஜீவநாடியாயிருக்கின்றன. ஆகையினாலேதான் அவைகளைப் பொதுமக்களின் நன்மைக்கான கருவியாக மாற்றுவதும் ரொம்ப அவசியமாகிறது. இந்தக்காரியத்தைச் செய்யாத வரையில் பொதுமக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தும் முறையில் பொருளாதாரத் துறையில் முன்னேற்றம் அடைந்து விடலாம் என்று எண்ணுவது வெறும் மயக்கமாகும்.

பாங்கு முறையைப் பொதுமக்களின் நன்மைக்கு உகந்த முறையில் எப்படி மாற்றலாம்? இது ஒரு சரியான கேள்விதான். ஆயினும் இதை ஆராய நமக்கு இங்கே அவகாசமில்லை. என்றாலும் ஒன்று சொல்லுவோம். பாங்குகளின் பங்குகளையெல்லாம் அரசாங்கமே விலைக்கு வாங்கி, அதற்குப் பதிலாக அரசாங்கக் கடன் பத்திரங்களைக் கொடுக்கலாம். பிறகு இந்த பாங்குகளை எல்லாம் ஒரு தலைமை ஸ்தாபனத்தின் கீழ் இணைத்து பொதுஜனத் தேவைகளுக்குகந்த முறையில் நடத்தலாம். இதையெல்லாவற்றையும் ஒன்றுசேர்ப்பது கஷ்டமாக இருப்பின் தனிப்பட்ட முறையில் ஆங்காங்கே பொதுஜனங்களின் நிர்வாகத்தின் கீழ் வைத்து நடத்தலாம். இதற்கு அரசாங்கம் பொதுமக்களின் கையில் இருக்க வேண்டுமென்பது தெரிந்த விஷயம். நாம் மேலே குறிப்பிட்ட பாங்கைத் தவிர, பதிவுசெய்து கொள்ளாமல் தனித்தனியாகவும் கூட்டு முறையிலும் நடைபெறும் கொடுக்

கல் வாங்கல் ஸ்தாபனங்கள் இந்தியாவில் ஏராளமாயிருக்கின்றன. இந்தியாவிலிருக்கும் அந்நிய நாட்டு பாங்குகளை எப்படி நடத்துவது என்ற பிரசினையும் இருக்கிறது. இந்தப் பிரசினைகளையெல்லாம் தீர்த்துவைக்கிற முறையில் நமது திட்டம் அமைந்திருக்கவேண்டும்.

ஆனால் நமது தொழில் முதலாளிகள் தயாரித்த திட்டத்தில் பாங்கு களைக் கட்டுப்படுத்துகிற பேச்சையே எடுக்கவில்லை. பாங்கிங் முறை முதலாளி வர்க்கத்தாரின் கோட்டை போன்றது. பாங்கிங் முறை பொது ஜனங்களின் கட்டுப்பாட்டின்கீழ் வந்துவிட்டால் முதலாளித்துவ முறைக்கே யல்லவா மோசம் வந்துவிடும்? அது காரணமாகவேதான் அவர்கள் அதைப்பற்றி ஒன்றும் சொல்லாமல் விட்டுவிட்டார்கள்.

## 8. சில அம்சங்கள் - திட்டத்தில் இருப்பதும் இல்லாததும்

இந்தத் திட்டத்தில் கல்வி, சுகாதாரம், ஆஸ்பத்திரி, வீடுபோன்ற காரியங் களுக்காகப் பெரும் பணத்தைச் செலவு செய்ய வேண்டும் என்று சொல்லியிருப்பதை நாம் வரவேற்கிறோம். ஆயினும் இவற்றில் ஒவ் வொன்றுக்கும் ஒதுக்கும் தொகை எவ்வளவு தூரம் சரி என்பது நமக்குத் தெரியவில்லை. உதாரணமாக உயர்தரக் கல்விக்காக ஒதுக்கியிருக்கும் பணம் போதாது. வைத்தியக் கல்வி ஒன்றுக்கே ஏராளமான பணம் தேவைப்படும். விசேஷத் தொழில்க் கல்வி, விஞ்ஞானக் கல்வி வேறு இருக்கின்றன.

இந்தத் திட்டத்தில் குறிப்பிட்டிருக்கும் போக்கு வரத்து சாதனங்களைப் பற்றிய விஷயங்களில், விமானப் போக்குவரத்தைப் பற்றிய குறிப்பே இல்லை. எதிர்காலத்தில் பெரிதும் அபிவிருத்தி அடையப் போகிற விஷயங் களில் விமானப் போக்குவரத்தும் ஒன்றாகும். "கடல் சுதந்திரத்தை"ப் பற்றிய பேசிவந்த உலக நாடுகள் இப்போது "ஆகாய சுதந்திரத்தை"ப் பற்றி பேச ஆரம்பித்திருக்கின்றன. விமான வழிகளை வரையறுத்து, விமான நிலயங்கள் கட்டுகிற விஷயங்களை ஆராய்ந்து, விமானப் போக்கு வரத்துக்கு ஒரு திட்டம் வகுத்து, அதை இதர போக்கு வரத்துத் திட்டங் களோடு இணைப்பது ரொம்ப அவசியமான காரியம். இந்தச் செலவுக்கு இந்தத் திட்டத்தில் ஒரு ஏற்பாடும் செய்யவில்லை.

கப்பல் போக்குவரத்தைப் பற்றிக் குறிப்பிடும்போதும் கரையோரக் கப்பல் போக்குவரத்தையேதான் இந்தத் திட்டத்தின் ஆசிரியர்கள் எண்ணிக்கொண்டிருக்கிறார்கள். கரையோரக் கப்பல் போக்குவரத்தோடு எதிர்கால இந்தியா திருப்தியடைந்துவிட முடியுமா? சமுத்திரங்களைக் கடந்து செல்லும் பெரிய கப்பல்கள் நமக்கு வேண்டாமா? சுருங்கச் சொன்னால் நமது வியாபாரக் கப்பல் படையையே இனிமேல்த்தான் உருவாக்கவேண்டி யிருக்கிறது.

இவற்றோடு இந்தத் திட்டத்தில் குறிப்பிடாத விஷயங்கள் பல இருக் கின்றன. உதாரணமாக, சமுதாய நலனுக்கான இன்சூரன்ஸ் முறை யைப்பற்றி இங்கே ஒன்றுமே சொல்லப்படவில்லை.

வெளிநாட்டு வியாபாரக் கொள்கையை எப்படி அமைப்பது என் பதைப் பற்றியும் இந்தத் திட்டத்தில் ஒன்றும் குறிப்பிடவில்லை, வெளி நாட்டு வியாபாரப் பிரசினையையும், அதிக ஏற்றுமதி அதிக இறக்குமதியின் மூலம் வெளிநாடுகளிலிருந்து நமக்கு வரவேண்டிய பணம், வெளிநாடு களுக்கு நாம் கொடுக்க வேண்டிய பணம் சம்பந்தமான பிரசினையையும்

எப்படித் தீர்ப்பது என்கிற விஷயம் அடிப்படையான விஷயங்களில் ஒன்ருகும்.

நமது நாணயப் பிரசினை வேறு இருக்கிறது. பிரிட்டிஷ் நாணயத்தோடு இணைத்திருக்கும் நமது நாணயம் மற்ற நாடுகளோடு நேராகத் தொடர்பு வைத்துக்கொள்ள முடியவில்லை. பிரிட்டிஷ் நாணயத்தின் மூலமாகவே தான் அது தொடர்பு வைத்துக்கொள்ளலாம். நமது ரூபாயை ஸ்டெர்லிங்கி லிருந்து விடுதலை செய்வது பற்றிய பிரசினை பழம் பிரசினையாகும். இந்தப் பிரசினையையும் நாம் ஒருநாள் தீர்க்காமல் முடியாது. இதைப்பற்றியும் இந்தத் திட்டத்தில் ஒரு குறிப்பும் இல்லை.

## 9. பணத்திற்கு வகை

இந்தத் திட்டத்திற்குத் தேவைப்படும் ரூ. 10000 கோடியைப் பெறுகிற வழிகளை ஆராய்வோம். அவை கீழ்வருமாறு:

| | | |
|---|---|---|
| ஸ்டெர்லிங் கடன் | 1000 | கோடி ரூபாய் |
| சேர்த்துவைத்திருக்கும் செல்வம் | 300 | ,, |
| அதிக ஏற்றுமதி | 600 | ,, |
| வெளிநாட்டுக் கடன் | 700 | ,, |
| இந்திய மக்களின் சேமிப்பு | 4000 | ,, |
| சிருஷ்டி செய்த பணம் | 3400 | ,, |
| | 10,000 | ,, |

**ஸ்டெர்லிங் கடன்**

மேலே சொன்னவற்றில் ஸ்டெர்லிங் கடனைப்பற்றி நாம் நிச்சயமாக நம்பியிருக்கலாம். சண்டை முடிகிற காலத்தில் ரூ. 1000 கோடியாகப் இது பெருகிவிடும் என்று திட்டத்தின் ஆசிரியர்கள் மதிப்பிட்டிருக்கிறார்கள். ரூ. 1500 கோடி வரையிலும் கூடப் போகலாம் என்று பல பொருளாதார நிபுணர்கள் அபிப்பிராயப்படுகிறார்கள். இந்தத் திட்டத்தை ஆரம்பிப்பதே இந்தக் கடன் தொகையைக் கொண்டுதான் என்று சொன்னல் மிகை யாகாது. இந்திய மக்கள் தங்கள் ரத்தத்தைச் சிந்திக் கொடுத்த கடன் இது. இதை நாட்டின் பொருளாதார அபிவிருத்திக்குச் செலவு செய்வது ரொம்பப் பொருத்தமான காரியம்.

இது கடன் கொடுத்தவர்களின் எண்ணம். கடன் வாங்கியவர்களின் எண்ணம் என்ன என்பதைத் தெரிந்துகொள்ளவேண்டாமா? இந்தக் கடனை எப்படியாவது இல்லை யென்று சொல்லி விடுவது, அல்லது சரியான அளவு அதைக் குறைத்தாவதுவிடுவது என்று பிரிட்டிஷ் முதலாளி வர்க்கத் தார் முடிவுசெய்து, அதற்கு வேண்டிய பிரசாரத்தைச் செய்ய ஆரம்பித் திருக்கிறார்கள். 'எகானமிட்ஸ்', 'பைனன்ஷியல் நியூஸ்', 'மான் செஸ்டர் கார்டியன்' போன்ற பிரிட்டிஷ் பத்திரிகைகளும், கெய்ன்ஸ் பிரபு போன்ற பிரபல பொருளாதார அறிஞர்களும் அரசியல் வாதிகளும் இந்தப் பிரசாரத்தை முனைந்து செய்துவருகிறார்கள்.

நேசதேசங்கள் போருக்காகச் செலவு செய்யும் தொகையில் இந்தியா அதிகமான பகுதியைப் பொறுத்துக்கொள்ளவேண்டும். இந்தக் கடன் பிரிட்டன்மீது அநியாயமாகச் சுமத்தப்பட்டிருக்கிறது. கடன் என்று சொன்னலும், செலவு என்று சொன்னலும், இந்தச் செலவுகளையெல்லாம் இந்திய மக்கள்தானே இப்போது பொறுத்துவருகிறார்கள். அப்படியிருக் கும்போது, இதைக் கடனக வைத்துக்கொள்ளாமல் செலவாக வைத்துக்

கொண்டால் என்ன கெட்டுப்போய்விடும்? அது இந்தியக் குடியானவனுக்கு ரொம்ப நன்மை பயப்பதாக இருக்குமே என்று இப்படியெல்லாம் அவர்கள் தாறுமாருக உளறுகிருர்கள். இந்தப் பிரசாரத்தினுல் இந்தியா வழிக்கு வராவிட்டால், ஸ்டெர்லிங்கின் மதிப்பைக் குறைப்பதன் மூலம் பலவந்தமாகக் கடன் தொகையைக் குறைத்துவிடுவோம் என்று பயமுறுத்துகிருர்கள். வாள்தவத்தில் சென்ற போருக்குப் பிறகு நடந்தது இதுதான். ரூபாயின் மதிப்பை இயற்கைக்குமாருன முறையில் பலவந்தமாக ஒன்றுக்கு இரண்டாக உயர்த்தி இந்தியாவுக்குக் கொடுக்கவேண்டிய கடனைப் பாதிக்குமேல் ஏப்பமிட்டு விட்டார்கள். இந்த மிரட்டலினுலும் காரியம் கைகூடாவிட்டால் இன்னும் பல கைவரிசைகளைக் காட்டுவார்கள். இந்தக் கடனைப் பிறநாட்டு நாணயங்களாக மாற்றிவிட இசையமாட்டோம் என்று சொல்லலாம். அப்படிச் சொன்னுல், உதாரணமாக, அமெரிக்காவில் சாமான் வாங்குவதற்கு இந்தக் கடன் தொகையை நம்பியிருக்க முடியாது. அல்லது இந்தக் கடன் தொகையைக்கொண்டு பிரிட்டிஷ் இந்திய அரசாங்கம் ஏதாவது அர்த்தமற்ற காரியத்தைச் செய்யக் கிளம்பினுலும் கிளம்பலாம். இந்தியக் குடியானவர்கள் நல்ல ரோடுகள் இல்லாமல் கஷ்டப்படுகிருர்கள், அவர்களுக்கு உதவி செய்யத்தான் செய்வோம் என்று பிரிட்டிஷ் இந்திய அரசாங்கம் இந்தக் கடன் வருமானத்தைக் கொண்டு ரோடுபோடக் கிளம்பினுலும் கிளம்பலாம். எப்படியாவது இந்தக் கடன் தொகையைக் கொண்டு இந்தியா தொழிலில் அபிவிருத்தியடைந்து விடக்கூடாது என்பதுதான் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியவாதிகளின் நோக்கம். ஆகையினுல் அவர்கள் நோக்கம் வெற்றியடைந்து விடாதபடி இந்தியப் பொதுஜனங்கள் ரொம்ப எச்சரிக்கையோடு பார்த்துக்கொள்ள வேண்டும்.

இந்தக் கடனை நாட்டின் பொதுச் சொத்தாகப் பாவித்துத் தொழிலபிவிருத்திக்கு உபயோகிக்க வேண்டுமென்று நமது தொழில் முதலாளிகள் சொன்னது மிகமிகப் பாராட்டத்தக்க விஷயம்.

### அதிக ஏற்றுமதி

அதிக ஏற்றுமதியின் மூலம் வருஷா வருஷம் 40 கோடி ரூபாய் கிடைக்குமென்று மதிப்பிட்டிருக்கிருர்கள். இது சந்தேகமான விஷயமே. ஏனெனில் வியாபார நோக்கத்தோடு பயிரிடும் சாக்கு, பருத்தி, தேயிலை, கடலை போன்ற மூலப்பொருள்களைக் குறைத்து உணவுப் பொருள்களை அதிகமாகப் பயிரிடவேண்டும் என்று அவர்களே கூறியிருக்கிருர்கள். உணவுப் பொருள்கள் இந்திய மக்களின் தேவைகளுக்குக் கண்டுமிஞ்சும் என்று சொல்ல முடியாது. இந்தியாவின் ஏற்றுமதியில் பெரும்பாகமான இந்த மூலப் பொருள்களின் உற்பத்தி குறைந்துவிட்டால், இந்தியாவின் ஏற்றுமதியும் குறையவே செய்யும். அப்படியிருக்கும்போது, அதிக ஏற்றுமதியின் மூலம் ரூ. 40 கோடி வருஷா வருஷம் கிடைக்குமென்று மதிப்பிட்டது எவ்வளவு சரி என்று நமக்குத் தெரியவில்லை. இந்தியா இது வரையில் வெளிநாடுகளின்மூலம் வாங்கிவந்த அழிபண்டங்களைத் தானே செய்ய ஆரம்பித்துவிடுமாகையால், இறக்குமதியும் குறையும். இறக்குமதியின் குறைவுக்கும் ஏற்றுமதியின் குறைவுக்கும் சரியாய்ப் போய்விடும். ஆகையால் வியாபாரத்தின் மூலம் வழக்கமாகக் கிடைத்துவந்த தொகை குறையாது. மேலும் அந்நிய நாடுகளிலிருந்து வாங்குகிற சாமான்களுக்கு ஸ்டெர்லிங் கடன் மூலம் கிடைக்கும் பணத்தைக் கொடுத்துவிடலாம் என்று அவர்கள் சொல்லுகிருர்கள். ஸ்டெர்லிங் கடனை முதலிலேயே நமது கணக்கில் சேர்த்துக்கொண்டுவிட்டோம். திரும்பவும் அதை வைத்தே வெளிநாட்டு வியாபாரத்தில் ரூ. 40 கோடி நமக்கு அந்நிய நாடுகள் தரவேண்டுமென்று கணக்குப் போடுவது, ஒன்றை இரண்டாகக் காட்டுவதாகும். ஆகையினுல் அதிக ஏற்றுமதியின் காரணமாக 600 கோடி ரூபாய் கிடைக்கும் என்கிற விஷயம் சந்தேகத்திற்கிடமானதே.

**வெளிநாட்டுக் கடன்**

வெளிநாடுகளில் கடன் வாங்குவதில் தவறு ஒன்றும் இல்லை. ஆனால் பூரணமான அரசியல் ஆதிக்கம் இந்திய மக்கள் கையில் இருந்தாலன்னியில் இது விரும்பத்தக்க விஷயமல்ல. அமெரிக்க முதலாளிகள் இந்தியச் சந்தையைப் பிடிப்பதற்கு ஆவலாக இருக்கிறார்கள். அவர்கள் இந்தியாவுக்குக் கடன் கொடுப்பதற்குப் பின்வாங்கமாட்டார்கள். ஆனால் இந்தியாவுக்குக் கடன் கொடுப்பதன் மூலம் இந்தியப் பொருளாதாரத்தில் தங்களுக்கு ஒரு செல்வாக்கு ஏற்படவேண்டுமென்று கேட்பார்கள். முயலுவார்கள். இந்த மாதிரி சந்தர்ப்பங்களில் அந்நிய ஆதிக்கத்துக்கு இடம் கொடுத்துவிடாமல் உறுதியாக நின்று காரியத்தைக் கைக்கொள்ளும் திறமையும் ஆற்றலும் அரசியலில் பூரண சுதந்திரம் வாய்ந்த பொதுஜனங்களின் அரசாங்கத்துக்குத் தான் இருக்க முடியும். நமது தொழில் முதலாளிகள் கற்பனை செய்கிற பொருளாதார சுதந்திரம் மட்டுமுள்ள இந்தியா வெளிநாடுகளில் கடன் வாங்குவது நமது மக்களைச் சுரண்டி நமது செல்வங்களை அடித்துக் கொண்டு போவதற்கு அந்நிய நாடுகளுக்கு அழைப்பு போலத்தான் ஆகும்.

**பண உற்பத்தி**

இந்தத் திட்டத்திற்கு வேண்டிய ரூ. 10000 கோடியில் ரூ. 3400 கோடிக்குப் பணத்தை உற்பத்தி செய்வதைத்தவிர வேறு வழியில்லை என்பது திட்டத்தின் ஆசிரியர்களின் அபிப்பிராயம். பணத்தைச் சிருஷ்டிப்பது என்பது ரொம்பச் சிக்கலான பிரசினை. பணத்தைச் சிருஷ்டிப்பதனால் பணப்பெருக்கம் ஏற்பட்டுவிடுமானால், பொதுஜனங்களுக்கு அதைவிட நரகம் வேறு இருக்க முடியாது.

**எதிர்ப்பு**

பணத்தை உற்பத்தி செய்கிற இந்த அம்சத்தைப் பற்றித்தான் பலமான எதிர்ப்பு இருக்கிறது. பணத்தை உற்பத்தி செய்யும் அளவுக்குப் பண்டங்களை உற்பத்தி செய்யமுடியாது. இதனால் பணப்பெருக்கமே ஏற்படும். பணப்பெருக்கத்தினால் இன்று நாம் படுகிற அவஸ்தை ஒன்றல்ல, இரண்டல்ல. மக்கள் பசியால் துடி துடித்து மடிகிறார்கள். பஞ்சம் நாடு முழுதும் பரவி வருகிறது. பணத்தின் மதிப்பு ரொம்பக் குறைந்துவிட்டது. விலைகள் தாறுமாறாக ஏறிவருகின்றன. கண்டபடி நோட்டை அச்சடித்துவிடுவதனால் செல்வத்தைப் பெருக்கிவிட முடியாது. பணப்புழக்கத்தை அதிகப்படுத்தி விலைகளை ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு மடங்கென்று ஏற்றிவிட்டுக்கொண்டுதான் போகலாம். இன்று நடப்பதுபோல விலை ஏறிக்கொண்டு போவதும், பணத்தின் வாங்குகிற சக்தி குறைந்து கொண்டு போவதும் தவிர, இதனால் ஒரு காரியத்தையும் சாதிக்கமுடியாது. விலையேற்றத்துக்கு தக்க அளவு பண வருமானமும் ஏற்படாதாகையால் பொதுமக்களின் பாடு திண்டாட்டமாகிவிடும். பண்டங்கள் கிட்டுவது அரிதாகிவிடுமாகையால், அவர்கள் பாதி வயிறும் பட்டினியுமாக இருக்க வேண்டியதைத் தவிர வேறு வழியில்லை.

இதற்குக் காரணம் என்னவென்றால், உற்பத்தி செய்த பணம் உண்மையான செல்வத்திற்கு அறிகுறியாக நிற்கவில்லை. அதற்கு ஒரு மதிப்பு விலை (Value) இல்லை. தங்க இருப்பின் பலத்தில் வெளியிட்ட பணமும் அல்ல இது. இது வெறும் காகிதமேயன்றி வேறில்லை. நோட்டை வேண்டிய அளவு அச்சடித்துவிடுவதனால், பணப்பெருக்கம் ஏற்படுமேயன்றி, அந்த பெருக்கத்திற்கு தக்க அளவு பண்டங்களின் பெருக்கம் ஏற்படாது. வெறும் காகித மதிப்புள்ள இந்தப் பணத்தைத் தொழில் அபிவிருத்திக்குத் தேவைப் படுகிற மூலதனமாக மாற்றவேண்டும் என்றால் இரும்பையும், நிலக்கரியையும் தொழிலுக்குத் தேவைப்படுகிற இதர

பொருள்களையும், இந்தக் காகிதப் பணத்தைக் கொடுத்து வாங்கவேண்டும். இந்த அற்புதத்தை எப்படிச் செய்யலாம்? இறுதியாகப் பார்த்தால் தொழிலாளர்கள் கைக்குச் சாமான்கள் போய்ச் சேருவதைப் பணப்பெருக்கத்தின் மூலம் தடுத்து, அதன் காரணமாக மிஞ்சும் மூலதனச் சேமிப்பைக் கொண்டே மேலே சொன்ன சாமான்களை வாங்கமுடியும். அதாவது பலவந்தமாகப் பொருளைச் சேமிக்கும்படி அவர்களைத் துன்புறுத்தி அவர்கள் வயிற்றிலடித்தாலன்றி, இந்தக் காகிதப் பணத்தை மூலதனமாக மாற்ற முடியாது. ஆதலால் பொதுமக்களின் தேவைகளைப் பலவந்தமாகக் குறைத்து, இந்த ரூ. 3400 கோடியைப் பெறுவது என்பது நமது தொழில் முதலாளிகளின் திட்டம். அரை வயிற்றுச் சாப்பாடுகூட இல்லாமல் பரதவிக்கும் இந்திய மக்களைக் கட்டாயப்படுத்தி இன்னும் உங்கள் தேவைகளைக் குறைத்துக் கொள்ளுங்கள் என்று சொல்லுவதா? ரொம்ப நன்றாயிருக்கிறது.

இன்றையப் பணப்பெருக்கம் பணக்காரர்களை இன்னும் பெரிய பணக்காரர்களாயும், ஏழைகளை இன்னும் பரம ஏழைகளாயும் ஆக்கிக் கொண்டு வருகிறது. தொழில் முதலாளிகளும் வியாபாரிகளும் கொள்ளை லாபம் தட்டி வருகிறார்கள். கள்ளச் சந்தை இப்போது நமது பொருளாதாரத்தில் ஒரு நிரந்தரமான இடம் பெற்றிருக்கிறது. விலைக்கட்டுப்பாடு காகிதத்தில் தான். பொதுமக்கள் பசியாலும் பஞ்சத்தாலும் மடிகிறார்கள். ஒரு வருஷத்திற்குச் சராசரி நோட்டு வெளியீடு 153 கோடியாக இருக்கும் போது இந்தக் கோலம்! ரூ. 3400 கோடி, அதாவது வருஷத்திற்கு ரூ. 226 கோடி நோட்டு வெளியீடு அதிகப்படுமானால் நாம் என்ன நிலையில் இருப்போம் என்பதைக் கற்பனை செய்துதான் பார்க்கவேண்டும். மேலும் 3400 கோடி என்பது தற்காலம் கிடைத்துவரும் நமது தேசிய வருமானத்தைப் போல ஒன்றரை மடங்கு என்று அறியும்போது பணப்பெருக்கம் எவ்வளவு கடுமையாக இருக்கும் என்பதை ஒருவாறு ஊகித்துக் கொள்ளலாம்.

பணத்தை அதிகமாகச் சிருஷ்டிப்பதால் பணப்பெருக்கம் ஏற்பட்டு விடாது. ஏனெனில் உற்பத்தியும் தொடர்ந்து அதிகப்படும் என்று சொல்லப்படுகிறது. இது தவறான எண்ணம். பணத்தைச் சிருஷ்டி செய்து விட்ட அதே கணத்தில் உற்பத்தி அதிகப்பட்டு விடமுடியாது. உற்பத்தி செய்யக் கொஞ்சம் காலம்பிடிக்கும். இந்த இடைக்காலத்தில் பணப்பெருக்கத்தின் முக்கிய அம்சமாகிய விலையேற்றம் ஏற்படும். இந்த விலையேற்றத்தைச் சமாளிப்பதற்கு இன்னும் அதிகமான பணத்தைச் சிருஷ்டி செய்யவேண்டிய கட்டாயம் ஏற்படும். இப்படியே இந்தப் பதினைந்து வருஷகாலமும் ஓயாத பணப்பெருக்கமாக இருக்கும்.

**புதிய பணத்தைச் சிருஷ்டிக்கலாமா?**

இது புதிய பணத்தைச் சிருஷ்டிப்பது சம்பந்தமாக ஏற்பட்டிருக்கிற எதிர்ப்பு. புதிய பணத்தைச் சிருஷ்டிப்பது பணப்பெருக்கத்தையும் கொண்டுவரலாம், உண்மையான பொருளாதார முன்னேற்றத்தையும் கொண்டுவரலாம். எந்த சந்தர்ப்பத்தில் எந்த நோக்கத்தோடு புதிய பணத்தைச் சிருஷ்டிக்கிறோம் என்பதை அது பொறுத்திருக்கிறது.

ஐக்கிய அமெரிக்காவில் ரூஸ்வெல்ட் அரசாங்கம் பொருளாதார நெருக்கடியைச் சமாளிக்க 1933-ம் வருஷம் பணத்தைச் சிருஷ்டிக்கத்தான் செய்தது. 1937-ம் வருஷம்வரை அது தொடர்ந்து பணத்தைச் சிருஷ்டித்துக் கொண்டே இருந்தது. 1936-ம் வருஷத்தில் மட்டும் சிருஷ்டித்த புதிய பணம் 410 கோடி டாலராகும். 1934 முதல் 1936 வரையுள்ள மூன்று வருஷகாலத்தில் 1070 கோடி டாலரைப் புதிதாகச் சிருஷ்டித்திருந்தபோதிலும், அதன் காரணமாக அமெரிக்காவில் பணப்பெருக்கம் ஏற்பட்டுவிடவில்லை. 1937-ம் வருஷம் தான் விலைகள் கொஞ்சம் அதிகமாக ஏறும் குறிகள் தென்பட்டன. அதற்குப் பல காரணங்கள் இருந்தன. சில

தொழில்கள் இனிமேல் அபிவிருத்திக்கு இடம் இல்லை என்கிற நிலையை அடைந்தது ஒரு காரணம்; முதலாளி வர்க்கத்தார் தொழில்களில் ஏக போக உரிமை அநுபவித்தது இரண்டாவது காரணம். லாபத்தையும், விலைகளையும் அரசாங்கம் கட்டுப்படுத்தாதது மூன்றாவது காரணம். இவை களோடு இன்னும் பல காரணங்களும் இருந்தன. அவைகளைப்பற்றி ஆராய நமக்கு இங்கே அவகாசம் இல்லை. ஆனால் நூற்றுக்கு இத்தனை சதவிகிதம் தான் லாபம் பெறலாம் என்று லாபத்தையும், இவ்வளவிற்கு மேல் விற்கக்கூடாதென்று விலையையும் கட்டுப்படுத்துவதோடு அமெரிக்கத் தொழில்களைப் பொதுவாகக் கட்டுப்படுத்துகிற அளவு ரூஸ்வெல்ட் அர சாங்கம் உறுதியாகவும் தைரியமாகவும் நின்றிருந்தால், பணப் பெருக்கமே வராமல் செய்திருக்கலாம். அதற்குப் பதிலாக, ரூஸ்வெல்ட் அரசாங்கம் பணப்பெருக்கம் வந்து விடுமோவென்று அஞ்சிப் புதிய பணத்தைச் சிருஷ்டிப்பதை நிறுத்திக் கொண்டது.

1933-ம் வருஷம் முதல் நாஜி ஜெர்மனி நாட்டின் பொருளாதாரத் தேவைகளைச் சமாளிக்கப் புதிய பணத்தைச் சிருஷ்டிக்க ஆரம்பித்தது. 1933 முதல் 1939 வரை அது சிருஷ்டித்த புதிய பணம் 3700 கோடி மார்க், அதாவது சுமார் 2770 கோடி ரூபாயாகும். சராசரி ஒரு வருஷத்துக்கு சுமார் 396 கோடி ரூபாய் புதிய பணத்தைச் சிருஷ்டித்தும் 8 கோடி மக்களேயுள்ள ஜெர்மனியில் பணப்பெருக்கம் ஏற்பட்டுவிடவில்லை. அதற் குக் காரணம் ஜெர்மன் அரசாங்கம் விலைவாசிகளை வெகு திறமையாகக் கட்டுப்படுத்தியதோடு தொழிலாளர்களின் சம்பளமும் உயராதபடி பார்த் துக் கொண்டதாகும். அத்துடன் தொழிலின் மீதுள்ள கட்டுப்பாடும் பூரணமாயிருந்தது. லாபத்தைக் கட்டுப்படுத்தாமல், தொழிலாளர்களின் சம்பளத்தைக் கட்டுப்படுத்த வேண்டிய காரணத்தால், ஜெர்மனியில் ஏற் பட்ட தொழிலபிவிருத்தி பொதுமக்களின் வாழ்க்கையை உயர்த்துவதற்கு உதவாமல், போர்க் கருவிகளைச் செய்து குவிக்க உதவியது. நாஜி ஜெர் மனி இவ்வளவு புதிய பணத்தைச் சிருஷ்டித்தும் பணப்பெருக்கம் ஏற் படாதபடி பார்த்துக்கொண்டது என்பது என்னவோ உண்மைதான். ஆனால் நாஜி ஜெர்மனி அடைந்த இந்த வெற்றி பொதுஜனங்களுக்கு ஒரு தோல்வியென்றே சொல்லவேண்டும். ஜெர்மன் அரசாங்கம் முன்னேற்றப் போக்குடைய அரசாங்கமாயிருந்து இந்த 2770 கோடி ரூபாயைச் சிருஷ் டித்திருந்தது என்று வைத்துக்கொள்வோம். தொழிலையும், தொழிலில் வரும் லாபத்தையும், விலையையும் அது கட்டுப்படுத்தி யிருக்குமானால், அப் போதும் பணப்பெருக்கம் ஏற்பட்டிராது. ஆனால் பொதுஜனங்களின் வாழ்க்கைத்தரம் பிரமிக்கத்தக்க முறையில் உயர்ந்திருக்கும்.

எனவே, மேலே காட்டிய உதாரணங்களிலிருந்து, புதிய பணத்தைச் சிருஷ்டிப்பதனால் எப்போதுமே பணப்பெருக்கம் ஏற்படும் என்பது இல்லை. அதனால் பொருளாதார அபிவிருத்தி ஏற்படுவதும் சாத்தியமாகும் என் பதை நாம் ஒருவாறு தெரிந்துகொள்ளலாம்.

### எப்போது புதிய பணத்தைச் சிருஷ்டிக்கலாம்

புதிதாகச் சிருஷ்டிக்கிற பணம் எப்போது செல்வப்பெருக்கை உண்டு பண்ணும், எப்போது வெறும் பணப் பெருக்கமாகவே போய்விடும் என் பதைப் பற்றி இங்கே இரண்டொரு வார்த்தை சொல்லவேண்டும். பொரு ளாதார அமைப்பின் கோளாறினால், எண்ணற்ற பேர் வேலையில்லாமல் திண்டாடுகிறார்கள். தொழிற்சாலை இயந்திரங்கள் சுற்றாவிட்டால், இவர் களுக்கு வேலை எங்கிருந்து கிடைக்கும்? செல்வத்தைச் சிருஷ்டிக்கிற ஆற்றல் வாய்ந்த இவர்களின் உழைப்புச் சக்தி பயன்படுத்தப்படாமல் இருக்கிறது. அதை இப்படி வீணாக்குவதனால் அதைப் பயன்படுத்துவதன் மூலம் கிடைக்கும் செல்வத்தை இழந்துவிடுகிறோம் என்றுதானே சொல்ல வேண்டும்.

செல்வத்தை உண்டாக்க உழைப்புச் சக்திமட்டும் இருந்தால் போதாது. இறுதியில் உழைப்புச் சக்திதான் செல்வத்தை சிருஷ்டிருக்கிறது என்று சொன்னாலும்கூட, இயற்கையின் செல்வங்களும் இருக்கவேண்டும். நிலம், நிலக்கரி, இரும்பு போன்ற இயற்கையின் செல்வங்களையும் மனித உழைப்பையும் ஒன்று சேர்க்கும்போது செல்வம் உற்பத்தியாகிறது. உதாரணமாக, விவசாயி நிலத்தை உழுகிறுன்: அதில் தானியம் விளைகிறது. தொழிலாளர்கள் சுரங்கத்தில் வேலே செய்கிறுர்கள்; தங்கமும், இரும்பும், நிலக்கரியும் கிடைக்கின்றன. இரும்பையும் நிலக்கரியையும் மனித உழைப்பையும் ஒன்று சேர்த்தால், பிரமாண்டமான ரயில் எஞ்சினைச் செய்ய முடிகிறது.

எனவே, மனித உழைப்பும், இயற்கையின் வசதிகளும் பயன்படுத்தப் படாமல் இருக்கும் நாட்டில் செல்வத்தைச் சிருஷ்டிக்க இடம் இருக்கிறது. அப்படியென்றுல், இந்தியாவில் இவையிரண்டும் இருக்கின்றனவே, செல்வத்தை ஏன் உற்பத்திசெய்ய முடியவில்லேயென்று கேட்கலாம். உழைப்புச் சக்தியும், இயற்கை வசதிகளும் இருந்தால் மட்டும் போதாது. உற்பத்தி செய்யும் வகையில் அவைகளை நாம் ஒன்று சேர்க்கவேண்டும். புதிய பணத்தைச் சிருஷ்டிப்பதன்மூலம் அவைகளை ஒன்றுசேர்க்க முடியுமானுல், அதைச் சிருஷ்டிப்பதில் என்ன தவறு? ஆதலால், தொழிலிலும், விவசாயத்திலும் எவ்வளவு தூரம் அபிவிருத்திக்கு இடம் இருக்கிறதோ, அந்த அளவுக்குப் புதிய பணத்தைச் சிருஷ்டிக்கலாம். ஏனெனில், இப்படிச் சிருஷ்டி செய்யும் பணம் செல்வ அபிவிருத்திக்குக் காரணமாகவும் உதவியாகவும் இருக்கிறது. செல்வ அபிவிருத்திக்கு இனி இடம் இல்லே என்று ஏற்பட்டுவிட்டால், அப்போது புதிய பணத்தைச் சிருஷ்டிப்பது அபாயகரமானதாகிவிடும். ஏனெனில் அந்தப் பணம் செல்வத்தை அதிகரிக்காமல் புழக்கத்திலுள்ள பணத்தை மட்டுமே அதிகரித்துவிடும். அப்போது பொருளாதார உடம்பைப் பணப்பெருக்கம் என்கிற வியாதி பற்றிக் கொள்ளும்.

உழைப்புச் சக்தியும் இயற்கை வசதிகளும் பயன்படுத்தப் படாமலிருக்கிற இடத்திலும் கண்ணை மூடிக்கொண்டு புதிய பணத்தைச் சிருஷ்டித்துவிட முடியாது. ஏனெனில், பொருளாதார அமைப்பிலுள்ள குற்றத்தினுல் தொழிலபிவிருத்தி ஏற்படுவதற்குப் பதிலாகப் பணப்பெருக்கமே ஏற்பட்டுவிடலாம். ஆகையால் அரசியல்ச் சக்தியின் உதவிகொண்டு பணப்பெருக்கம் ஏற்படாமல் பொருளாதார வாழ்க்கையைக் கட்டுப்படுத்தக்கூடிய ஆற்றலும் ஏற்படவேண்டும். பொருளாதார வாழ்க்கையைக் கட்டுப்படுத்துவதிலும் இரண்டு விதங்கள் இருக்கின்றன. நாஜி ஜெர்மனியில் நடந்ததுபோல, பொதுஜனங்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தாமல் முதலாளி வர்க்கத்தாரின் பணப்பையை நிரப்புகிற முறையில் பொருளாதாரத்தைக் கட்டுப்படுத்தலாம். அல்லது சோவியத் ருஷ்யாவில் நடந்தது போல, முதலாளி வர்க்கத்தாருக்கு இடம் கொடாமல் பொது ஜனங்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துகிற முறையில் பொருளாதாரத்தைக் கட்டுப்படுத்தலாம்.

பொதுஜனங்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துகிற முறையில் பொருளாதாரத்தைக் கட்டுப்படுத்துகிற காரியத்தை அரசியலிலும் பொருளாதாரத்திலும் பூரண ஆதிக்கம் பெற்றுள்ள பொதுஜனங்களின் அரசாங்கம்தான் செய்யமுடியும் என்பது தெரிந்த விஷயம். இந்த அரசாங்கம் பூரண சமதர்மத்தைக் கைக்கொள்ளாத போதிலும், சமதர்மத்தை நோக்கிச் செல்லுகிற முன்னேற்ற நோக்கமுள்ள அரசாங்கமாகவாவது இருக்க வேண்டும். குறைந்த பட்சம், தொழில், விவசாயம், பாங்குமுறை ஆகியவற்றைத் தன் திட்டத்திற்குப் பொருந்துமாறு நிர்வாகம் செய்து, லாபம், விலே, வெளிநாட்டு வியாபாரம் ஆகிய இவைகளைக் கட்டுப்படுத்துகிற அளவாவது அதற்குச் சக்தி இருக்கவேண்டும். பொருளாதார வாழ்க்கையின்

இந்த அம்சங்களைக் கட்டுப்படுத்துகிற பொதுஜன அரசாங்கம், பயன்படுத்தாமல் இருக்கும் உழைப்புச் சக்தியையும் இயற்கை வசதிகளையும் ஒன்று சேர்க்கும் நோக்கத்தில் புதிய பணத்தைச் சிருஷ்டித்தால், அதனால் பொருளாதார அபிவிருத்தி ஏற்படுமேயொழிய பணப்பெருக்கம் ஏற்படாது. ஆனால் இவ்வளவு அம்சங்களையும் கட்டுப்படுத்தக்கூடிய அரசாங்கத்துக்குப் புதிய பணத்தைச் சிருஷ்டிக்கிற அவசியமே ஏற்படாமல் போனாலும் போகலாம்.

பணத்தைச் சிருஷ்டித்துவிட்ட அந்த கணத்திலேயே, பண்டங்களையும் உற்பத்தி செய்துவிட முடியாது. பண்டங்கள் உற்பத்தியாகி வெளிவரக் கொஞ்சம் காலம் பிடிக்கும். இந்த இடைக் காலத்தில் ஏற்படுகிற பணப் பெருக்கம் தொடர்ந்து பணப் பெருக்கம் ஏற்படக் காரணமாய் இருக்கும் என்று சொல்லுகிறார்கள். ஆனால் பணத்தைச் சிருஷ்டிப்பதற்கும் பண்டங்களை உற்பத்தி செய்வதற்கும் உள்ள இந்த இடைக்காலத்தில், பொதுவாகத் தொழில்களைக் கட்டுப்படுத்துவதோடு, விசேஷமாக விலையையும் லாபத்தையும் கட்டுப்படுத்துவதன்மூலம் பணப்பெருக்கத்தின் முக்கிய அம்சமான விலையேற்றம் வராமல் தடுத்துவிடுவது அசாத்தியமான காரியம் அல்ல.

மேலே சொன்ன விஷயங்களை மனதில் வைத்துக்கொண்டு நமது தொழில் முதலாளிகள் போட்ட திட்டத்தைப் பார்ப்போம். இந்தத் திட்டப்படி, பொருளாதாரத் துறையில் மட்டும் சுதந்திரமுள்ள அரசாங்கம் இருந்தால் போதும்; அரசியல் சுதந்திரம் தேவையில்லை. மூலத்தொழில்களையும் இதர தொழில்களையும் லாப நோக்கத்தை அடிப்படையாகக்கொண்ட முதலாளிகளையே அபிவிருத்தி செய்யும்படி விட்டுவிடவேண்டும். நிலச்சுவான்தார் முறையும், விவசாயக்கடனும் இருந்தபடியே யிருக்க, விவசாயத்தை அபிவிருத்தி செய்யவேண்டும். இந்த அலங்கோலமான நிலையில் மூலதனத்தைப் பெறும்பொருட்டு 3400 கோடி ரூபாயை அச்சடிக்கவேண்டும். இதுதான் நமது தொழில் முதலாளிகள் சொல்லுகிற ஆலோசனை. இந்த ஆலோசனையைப் பின்பற்றினால் பயங்கரமான பணப்பெருக்கம் ஏற்பட்டு, புதிய பணத்தைச் சிருஷ்டிப்பதை எதிர்ப்பவர்கள் கூறும் ஒவ்வொரு வார்த்தையும் மெய்யாகிவிடும் என்பதில் எள்ளளவுகூடச் சந்தேகம் இல்லை.

பொதுமக்களுக்குத் தேவைப்படுகிற அழிபண்டங்களைத் தாராளமாக உற்பத்தி செய்யப்போகிறோம் என்று வாக்களித்த நமது தொழில் முதலாளிகள், மூலதனப் பிரசினைவரும்போது, பொதுமக்களைப் பட்டினிபோடுகிற அளவுக்கு அவர்களுடைய தேவைகளைக் குறைப்பதற்குள்ள வழியைச் சொல்லுகிறார்கள். பொருளாதாரத் துறையில் பிற்போக்கான நிலையில் இருக்கும் நமது நாட்டை முன்னணிக்குக் கொண்டு வருவதற்குப் பெரிய தியாகங்களைச் செய்யாமல் முடியாது என்பது உண்மைதான். ஆனால் தியாகம் செய்வது என்பது எல்லோருக்கும் சமமாக இருக்கவேண்டும். மேலும், தாங்குகிற அளவுக்குத்தான் பொதுமக்களைத் தியாகம் செய்யும்படி கேட்கலாம். முதலாளி வர்க்கத்தாரின் பையை நிரப்புவதற்காக பொதுமக்களையெல்லாம் தியாகம் செய்யச் சொல்லி வற்புறுத்துவது நியாயமாகாது. நியாயமில்லாத இந்தக் காரியத்தைத்தான் பணப்பெருக்கம் செய்கிறது. இந்தத் திட்டப்படி பணத்தைச் சிருஷ்டி செய்வது பணப்பெருக்கத்தைச் சிருஷ்டி செய்வதுதான் என்பது தெரிந்த விஷயம். இது முதலாளி வர்க்கத்தாரின் நன்மைக்காகப் பொதுமக்களைக் கொள்ளையடிக்கிற காரியமேயன்றி வேறில்லை.

மூலதனத்தைப் பெறுவதற்கு இதைவிட யோக்கியமான வழிகள் எத்தனையோ இருக்கின்றன. நூற்றுக்கு இத்தனை சத விகிதத்திற்குமேல் லாபம் அடையக்கூடாதென்று தடை செய்வது, கொழுத்த சம்பளங்களைக் குறைப்பது, அடிப்படையான தேவைகளுக்கன்றிப் போக போக்

யங்களுக்கான பண்டங்களை உற்பத்தி செய்வதை நிறுத்துவது, எல்லோருக்கும் கிடைக்கும் வண்ணம் வாழ்க்கைக்கு அடிப்படையான பொருள்களை நியாயமான முறையில் விநியோகிப்பது, இன்னும் இவைபோன்ற எத்தனையோ வழிகள் இல்லாமலா போய்விட்டன? இந்த வழிகளையெல்லாம் பின்பற்றிய பிறகும் மூலதனத்தேவை ஏற்படுமானல், அப்போது புதிய பணத்தைச் சிருஷ்டிப்பதைப் பற்றி ஆலோசனை செய்யலாம். ஆனல் அதைப்பற்றி ஆலோசிக்குமுன், புதிய பணத்தைச் சிருஷ்டிப்பதற்கு நாம் மேலே கூறிய நிபந்தனைகளெல்லாம் நிறைவேறவேண்டும். அது வரையில் புதிய பணத்தைச் சிருஷ்டிப்பதைப் பற்றிக் கனவில்க்கூட நினைக்கக்கூடாது. நமது தொழில்ச்சாலை முதலாளிகள் சொல்லைக்கேட்டுப் புதிய பணத்தைச் சிருஷ்டித்தோமானல், அது பொதுஜனங்களுக்குத் துரோகம் செய்வதற்கே சமமாகும்.

## 10. முடிவுரை

பொருளாதார அபிவிருத்திக்குத் திட்டம் போடுவது ஒரு வீடு கட்டுவதை ஒக்கும். முகப்பு, ஹால், இரண்டாங்கட்டு, சமையற்கட்டு என்று இடத்தின் விசாலத்துக்குத் தக்க முறையிலும், தேவைகளுக்குத் தக்க முறையிலும் எல்லாப் பகுதிகளும் ஒன்றுக்கொன்று பொருத்தமாக இருக்கிற முறையில் எஞ்சினியர் ஒரு வீட்டைக் கட்டுகிறர். அப்படியில்லாமல் முகப்பைக் கண்டபடி பெரிதாக்கிவிட்டு, சமையற்கட்டுப் பகுதியை ரொம்பச் சிறிதாக்கி, மற்ற இடத்தையெல்லாம் பிரமாண்டமான ஒரு குளிக்கிற அறையாகச் செய்தால், அந்த வீடு வசிப்பதற்கு உபயோகப்படுமா? அழகாகத்தான் இருக்குமா? அதைப்போலவே, மூலத்தொழில், அழிவுப்பொருள் தொழில், கைத்தொழில், விவசாயம், வியாபாரம் போன்ற விஷயங்கள் நாட்டின் தேவைக்கு ஒத்தவாறு தக்க அளவில் ஒன்றுக்கொன்று பொருந்தி இருக்கிற முறையில் பொருளாதாரத் திட்டத்தை அமைக்கவேண்டும். ஆரோக்கியத்துக்கும் அழகுக்கும் எடுத்துக்காட்டா யிருக்கும் ஒரு அமைப்பான வீட்டைப்போல நாட்டின் பொருளாதார நலனுக்கும் சுபிட்சத்துக்கும் எடுத்துக்காட்டாக நமது திட்டம் அமைந்திருக்கவேண்டும்.

ஆனல் நமது தொழிற்சாலை முதலாளிகள் போட்டிருக்கும் திட்டத்தில் ஒரு ஒழுங்கு, ஒற்றுமை என்பதையே காணமுடியவில்லை. அங்கே ஒரு அறை, இங்கே ஒரு மாடம், நடுவிலே ஒரு வெளியிடம் என்று இப்படி ஒரு வீட்டைக் கட்டினல், அந்த வீடு எவ்வளவு அழகாயிருக்கும்? அந்த அழகைத்தான் நமது தொழில்ச்சாலை முதலாளிகள் போட்ட திட்டத்திலும் பார்க்க முடிகிறது. மூலக்கருவிகளை உற்பத்தி செய்யும் தொழிலுக்கும் அழிபண்டங்களை உற்பத்திசெய்யும் தொழிலுக்கும் உள்ள தொடர்பு என்ன, அவை எப்படி இணைக்கப்பட்டிருக்கின்றன? பொதுவாகத் தொழிலுக்கும் விவசாயத்துக்கும் உள்ள தொடர்பு எப்படி இருக்கும், அவை எப்படி இணைக்கப்பட்டிருக்கின்றன? இந்த விஷயங்களைப் பற்றித் திட்டத்தில் ஒன்றுமே சொல்லவில்லை. ஒவ்வொன்றும் மற்றவைகளோடு தொடர்பில்லாமல் தனித்தனியாக நிற்கின்றன. இவையெல்லாம் இப்போதிருப்பது போலவே இருக்குமென்றல், பிறகு அதற்குத் திட்டம் எதற்கு?

இந்தத் திட்டத்தில் மூலத் தொழிலுக்கு முக்கியத்துவம் கொடுக்கிற அம்சத்தை இந்திய மக்கள் எல்லோரும் மனமார வரவேற்பார்கள் என்பதில் சந்தேகமில்லை. ஏனெனில் தொழிலபிவிருத்தியின் மூலமே இந்தியா அந்நிய நாடுகளின் பிடியிலிருந்து விடுதலையடைய முடியும் என்பது தெரிந்த விஷயம். ஆனல் உற்பத்தி செய்யும் செல்வத்தை விநியோகிக்கிற பிரசினையைப்பற்றி இந்தத் திட்டம் ஆராயவில்லை. அதைப்

பிறகு பார்த்துக்கொள்ளலாம் என்று தள்ளிப்போட்டிருக்கிறது. விநியோகப் பிரசினையை நியாயமான முறையில் தீர்த்துவைக்காத வரையில் ஜனங்களின் வாழ்க்கைத் தரத்தை 100 சதவிகிதம் உயர்த்துவது என்பது முடியாத காரியம்.

மூலத் தொழில்கள் பொதுமக்களுக்கே சொந்தமாக இருக்கவேண்டும் என்பதை இந்தத் திட்டம் ஒப்புக்கொள்ளவில்லை. இந்தப் பிரசினையையும் எதிர்கால ஆராய்ச்சிக்கென்று தள்ளிப் போட்டிருக்கிறது. அதற்கிடையில் அதாவது இந்தத் திட்ட காலத்தில், தொழில் தனிப்பட்ட முதலாளிகள் கையிலேயே இருக்கவேண்டும் என்று அது குறிப்பாக உணர்த்துகிறது. தொழில், சிறப்பாக மூலத் தொழில், தனிப்பட்ட முதலாளிகள் கையில் இருக்கும்வரை தொழிலபிவிருத்தியும் விவசாய அபிவிருத்தியும் ஏற்படுவது சாத்தியமல்ல. இவ்விரண்டு துறைகளிலும் அபிவிருத்தி ஏற்படாதபோது, பொதுமக்களின் வாழ்க்கைத் தரத்தையும் உயர்த்த முடியாது.

உளுத்துப்போன பழைய விவசாய முறையை அப்படியே வைத்துக் கொள்ளவேண்டும் என்று இத்திட்டம் கூறுகிறது. நிலச்சுவான்தார் முறையையும் விவசாயக் கடனையும் அப்படியே விட்டுவைக்கிறது. துண்டு பட்டு உபயோகத்துக்கு உதவாமல் போயிருக்கும் இந்த விவசாயமுறையை வைத்துக்கொண்டு விவசாய வருமானத்தை 30 சதவிகிதம் எப்படி அதிகப் படுத்துவது? விவசாயத்தை அபிவிருத்தி செய்யாதபோது, தொழிலில் அபிவிருத்தி ஏற்படுவதுதான் எப்படி?

மூலதனத்தைப் பெறுவதற்கு இந்தத் திட்டத்தில் கூறியிருக்கும் புதிய பணத்தை சிருஷ்டிக்கிற ஆலோசனை ரொம்ப ஆட்சேபகரமானது. ஏனெனில் நாட்டின் பொருளாதார அமைப்பில் பொதுமக்களின் நன்மைக்கான முறையில் புரட்சிகரமான மாற்றங்களை ஏற்படுத்தாதவரையில், பணத்தைச் சிருஷ்டிப்பது என்பது பணப்பெருக்கினால் நாட்டை நாசம் செய்வதாகும். பணக்காரனை மேன்மேலும் பணக்காரனாக்கவும் ஏழையை இன்னும் கேவலமான ஏழையாக்கவும் செய்கிற காரியம் இது. இதைப் பொதுமக்கள் ஒரு நாளும் ஏற்றுக்கொள்ள முடியாது.

எனவே, இந்தத் திட்டத்தின் அம்சங்களை ஆராய்ந்து பார்த்தால், இது தொழில்ச்சாலை முதலாளிகளின் நன்மைக்காகப் போட்ட திட்டமேயன்றித் தேசமக்களின் நன்மைக்காகப் போட்ட திட்டம் அல்ல என்பது வெளியாகும். தேசத்துக்காகப் போடுகிற திட்டத்தில் லாப நோக்கத்துக்கு இடமில்லை. முதலாளித்துவ முறையின் கண்மூடித்தனமான போக்கைக் கடிவாளம் போட்டுக் கட்டுப் படுத்துவதுதான் அந்தத் திட்டத்தின் அஸ்திவாரமாக இருக்கமுடியும். அந்தமாதிரித் திட்டத்தை பொதுஜனங்களின் பிரதிநிதியாக உள்ளவர்கள் தயாரிக்க முடியுமேயன்றி, சொந்த நன்மையைக் கோரும் தொழில்ச்சாலை முதலாளிகள் தயாரிக்க முடியாது, ஜவஹர்லால் நேருவைத் தலைவராகக்கொண்ட தேசியத் திட்டக் கமிட்டி இந்தத் துறையில் நமக்கு ஓரளவு வழிகாட்டியிருக்கிறது. அந்தக் கமிட்டி வகுத்த மூலாதாரக் கொள்கைகளை அடிப்படையாக வைத்துக்கொண்டு தேசியத் திட்டம் ஒன்றை வகுக்க வேண்டும். இந்தத் திட்டம் நமக்கு விரைவில் கிடைக்குமா? இந்தக் கேள்விக்கு எதிர்காலம்தான் பதிலளிக்க முடியும்.

# இரண்டாம் பாகம்

## 1. விநியோகம்

உற்பத்தி செய்யும் பொருளை நியாயமான முறையில் விநியோகிப்பது அடிப்படையான பிரசினைகளில் ஒன்றாகும். 'இந்தப் பிரசினையை எவ்வளவு அற்புதமாகத் தீர்த்துவைத்திருக்கிறோம், பாருங்கள்!' என்று நமது தொழிற்சாலை முதலாளிகள் பாம்பேதிட்டத்தின் இரண்டாம் பகுதியை இந்திய மக்களின் முன் சமர்ப்பிக்கிறார்கள். விநியோகப் பிரசினையைத் தள்ளிப்போட்டதன் காரணத்தையும் அவர்கள் இங்கே கூறுகிறார்கள். பண்டங்களை உற்பத்தி செய்த பிறகல்லவா அவற்றை விநியோகிக்க வேண்டும்? அதனாலேதான் முதற்பகுதியில் பண்டங்களை உற்பத்தி செய்தோம், இரண்டாம் பகுதியில் அவற்றை விநியோகிக்கிறோம் என்று அவர்கள் கூறுகிறார்கள். உற்பத்தி சாதனங்களை உருவாக்குவதுபற்றி அவர்கள் கூறிய ஆலோசனைகளை நாம் ஒருவாறு ஆராய்ந்தோம். இப்போது விநியோகப் பிரசினையை அவர்கள் எப்படித் தீர்த்துவைக்கிறார்கள் என்பதைப்பற்றிச் சற்று பார்க்கலாம்.

### சராசரி வருமானம் உண்மையான வருமானம் அல்ல

மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்குப் பண்டங்களை அதிகமாக உற்பத்தி செய்வது அவசியம். ஆனால் பண்டங்களை உற்பத்தி செய்து குவித்துவிடுவதனால் மட்டும் காரியம் கைகூடிவிடாது. உற்பத்தி செய்த பண்டங்களைப் பொதுமக்கள் கைக்குப் போய்ச்சேரும் வண்ணம் விநியோகிப்பது ரொம்ப முக்கியமான விஷயமாகும். உண்மையைச் சொல்லப்போனால், விநியோகிக்கிற பிரசினையைத் திருப்திகரமாகத் தீர்த்து வைக்காமல் பண்டங்களை உற்பத்தி செய்ய முனைவது நாட்டின் வறுமையைத் தீர்ப்பதற்குப் பதிலாக அதற்கு ஆக்கமளிப்பதுபோல ஆகிவிடும். ஆம், அதனால் சில முதலாளிகளின் பை நிரம்பலாம். ஆனால் பொதுமக்களின் நிலை அதனால் ஒருநாளும் அபிவிருத்தியடையப் போவதில்லை.

தற்காலம் ஒரு இந்தியனுக்குக் கிடைக்கும் சராசாரி வருஷ வருமானம் வெகு குறைவு, அதாவது ரூ. 65 தான். இந்த ரூ. 65-ம் எல்லோருக்கும் கிடைக்கிறதா என்றால், இல்லை. இது ஒவ்வொரு இந்தியனுக்கும் கிடைக்கும் சராசரி வருஷ வருமானமேயன்றி உண்மையாகக் கிடைக்கும் வருஷ வருமானம் அல்ல. ஒரு தொழிற்சாலை முதலாளிக்கு வருஷத்திற்கு ரூ. 20 லட்சம் வருமானம் வரலாம். நமது கணக்கில் அவருக்கும் வருஷத்திற்கு ரூ. 65 - அதாவது அவருக்குக் கிடைக்கும் வருமானத்தில் சுமார் 30769-ல் ஒரு பங்கு—கிடைப்பதாகவே வைத்துக்கொண்டிருக்கிறோம். எஞ்சிய 30768 பங்கு எங்கே போய்விட்டது? வருஷத்திற்கு ரூ. 40 வருமானம் பெறும் 80000 பேருடைய சராசரி வருமானத்தின் எஞ்சிய ரூ. 25 இதிலிருந்து தான் வருகிறது. அதாவது வருஷத்திற்குத் தலைக்கு ரூ. 40 சம்பாதிக்கும் 80000 பேருடைய மொத்த வருமானமும் வருஷத்திற்கு ரூ. 20 லட்சம் சம்பாதிக்கும் ஒரு முதலாளியின் வருமானமும் ஒன்று சேர்ந்தால் 80001 பேருக்கும் தலைக்கு ரூ. 65 சராசரி வருஷ வருமானம் கிடைக்கிறது. நாம் உதாரணத்திற்காக ஒரு முதலாளியை எடுத்துக்கொண்டோம். இந்தியாவில் இவரைப்போல எத்தனையோ முதலாளிகள் இருக்கிறார்கள். எனவே, சராசரி ரூ. 65 வருஷ வருமானம் என்று கணக்குப் போட்டுவிட்டதனால் ஒவ்வொரு இந்தியனுக்கும் ரூ. 65 கிடைத்துவிடவில்லை.

இந்தியா முழுவதையும் எடுத்துப்பார்க்கும்போது ரூ. 65 சராசரி வருஷ வருமானம் என்று கணக்கிட்டோம். இந்தியாவின் நகரங்களை ஒரு புறமாகவும், கிராமங்களை ஒரு புறமாகவும் வைத்துக் கணக்கிட்டால் நகரங்களின் சராசரி வருமானம் ரூ. 166 ஆகவும் கிராமங்களின் சராசரி வருமானம் ரூ. 51 ஆகவும் இருப்பதைக் காண்போம். இந்திய மக்களில் பெரும்பான்மையோர் கிராமங்களிலே தான் வசிக்கிறார்கள். ஆகையால் பெரும்பான்மையான இந்திய மக்களின் சராசரி வருஷ வருமானம் ரூ. 51 என்று தான் வைத்துக்கொள்ளவேண்டும். ஆயினும் இவர்களது உண்மையான வருமானம் இன்னும் குறைவு. ஏனெனில் குடியானவர்களில் இரண்டு ஏக்கருக்கும் குறைந்த நிலம் வைத்திருப்பவர்களின் தொகைதான் அதிகம். இவர்களை விட விவசாயத் தொழிலாளர்களின் நிலை இன்னும் மோசம். இந்த நிலையில் வருஷத்தில் 3 லிருந்து 6 மாதம் வரை இவர்களுக்கு வேலையும் கிடைக்காமல் போய்விடுகிறது. கிராமங்களைவிட நகரங்கள பாடு சௌகரியம் தான் என்று எண்ணலாம். ஆயினும் தொழிற்சாலை முதலாளிகள், வியாபாரிகள் ஆகியோரின் வருமானம் அதிகப்பட்டது தான் இந்த ஏற்றத்திற்குக் காரணமேயன்றி, தொழிலாளர்கள், நகரங்களில் வசிக்கும் பொது மக்கள் ஆகியோரின் வருமானம் உயர்ந்ததனால் அன்று.

### வித்தியாசம் குறையுமா?

ஆகையால் இந்திய மக்களின் நன்மையைக் கோரிவகுக்கும் எந்தத் திட்டத்திலும் ஒவ்வொரு இந்தியனுக்கும் கிடைக்கும் சராசரி வருஷ வருமானத்தைமட்டும் உயர்த்தாமல் உண்மையான வருஷ வருமானத்தை உயர்த்துவதற்கு ஏதுவான ஒரு விநியோக முறையைக் கையாள வேண்டும்.

அதற்கு இன்று தடங்கலாக இருப்பது எது என்ற கேள்வி எழுகிறது. பொதுஜனங்களுக்கு அத்யாவசியமாகத் தேவைப்படுகிற பொருள்கள் என்ன, எவ்வளவு தேவைப்படுகின்றன என்ற விஷயங்களைப்பற்றி முதலாளி வர்க்கத்தார் சிந்திப்பதில்லை. அவர்களுக்கு அதைப்பற்றிக் கவலையில்லை. அவர்கள் கவலையெல்லாம் எப்படி அதிகப்படியான லாபத்தைச் சம்பாதிப்பது என்பதே யாகும். ஒரு பொருள் பொதுஜனங்களுக்கு எவ்வளவு அத்யாவசியமானதாயிருந்தாலும், அதன் உற்பத்தியைக் குறைப்பதனால் நல்ல லாபம் கிடைக்கக் கூடியதாயிருப்பின், அந்தப் பொருளின் உற்பத்தியைக் குறைக்கத் தங்களாலான முயற்சிகளையெல்லாம் அவர்கள் செய்வார்கள். சமீபத்தில், துணியின் உற்பத்தியைக் குறைத்து விலையை ஒன்றுக்கு ஏழுமடங்காக உயர்த்த நமது தொழிற்சாலை முதலாளிகள் செய்த அரும்பெரும் செயல்களை நாம் இதற்குள் மறந்துவிட முடியாதல்லவா? இதற்குக் காரணம் என்ன? உற்பத்தி சாதனங்கள் ஒருசிலருக்குச் சொந்தமாயிருப்பதேயாகும். லாபநோக்கத்தை அடிப்படையாகக் கொண்ட முதலாளித்துவமுறையில் உற்பத்தி சாதனங்கள் ஒருசிலர் கையில் சிக்கிவிடுகிற காரணத்தினால், வருமானத்தில் ஒருவருக்கொருவரிடையே அபாரமான வித்தியாசங்கள் ஏற்படுவதும், ஒரு சிலர் பண்டைய நவாப்புகள்போல இன்பத்தில் தோய்ந்திருக்க,பெரும்பான்மையான மக்கள் வறுமைக்கும் பிணிக்கும் இலக்காவதும், வர்க்க வேற்றுமைகள் ஏற்படுவதும் சாத்தியமாகின்றன. எனவே, நாட்டின் உற்பத்தி சாதனங்கள் பொதுமக்களின் பிரதிநிதியாக விளங்கும் அரசாங்கத்திற்குச் சொந்தமாகி, அதன் நிர்வாகத்தின்கீழ் வந்தாலொழிய, மக்களின் தேவைக்குத்தக்க முறையில் உற்பத்தியைப் பெருக்கி, வருமானத்தில் இன்று காணும் தாரதம்மியங்களை ஒழித்து, உற்பத்திசெய்த பண்டங்களை நியாயமாக விநியோகித்து, பொதுமக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவது சாத்தியமாகாது.

வருமானத்தில் ஏற்பட்டிருக்கும் தாரதம்மியத்தைக் குறைத்து விநியோகப் பிரசினையைத் திருப்திகரமாகத் தீர்த்துவைப்பதற்கு பாம்பே திட்டம் கூறும் ஆலோசனை என்ன? மரணவரி, வருமானவரி போன்ற வரிகளை விதிப்பது, விவசாயத்தைச் சீர்திருத்துவது, சிறிய தொழில்களுக்கும் கிராமத்தொழில்களுக்கும் உற்சாகமளிப்பது ஆகிய இவைகளைச் செய்தால் வருமானத்தில் ஏற்படும் தாரதம்மியங்களைக் குறைத்துவிடலாம் என்பது இந்தத் திட்டத்தின் ஆசிரியர்களின் நம்பிக்கை. மேலேசொன்ன வரிகளையெல்லாம் விதிக்கும் ஒரு முதலாளித்துவநாட்டை உதாரணமாக எடுத்துக் கொள்வோம். பிரிட்டனில் மரணவரி, மிதலாபவரி, வருமானவரி போன்ற வரிகளை மிகக்கடுமையாக விதிக்கிறார்கள். ஆயினும் இங்கே 25 வயதுக்கு மேற்பட்டவர்களின் மொத்த எண்ணிக்கையில் ஒரு சதவிகிதமேயுள்ளவர்கள் நாட்டின் மொத்த வருமானத்தில் 20 சதவிகிதத்தைப் பெற்றுவருகிறார்கள். அதிலும் சொந்தச் சொத்துரிமையின் காரணமாகக் கிடைத்த வருமானமே இது என்பதை நமது தொழிற்சாலை முதலாளிகளே ஒப்புக் கொள்ளுகிறார்கள். அப்படியிருக்கும்போது, இந்த வரிகளினால் இங்கிலாந்தைவிட இந்தியாவில் அதிகபயன் ஏற்பட்டுவிடும் என்று எண்ண முடியுமா? இந்த வரிகளினால் பயனே ஏற்படாது என்பது நமது அபிப்பிராயம் அல்ல. ஆனால் வருமானத்தில் ஏற்படும் தாரதம்மியத்தைக் குறைப்பதற்கு இவை அவ்வளவு உதவியாக இருக்கமாட்டா என்பதையே நாம் வற்புறுத்த விரும்புகின்றோம்.

இந்தியாவில் வருமானவரி வெகுகாலமாக இருந்துவருகிறது. மிதலாபவரியும் பலவருஷங்களாக இருக்கிறது. ஆயினும் இந்தவரிகளினால் இந்தத் தாரதம்மியங்களை ஒரே படியாக இல்லாவிட்டாலும், திட்டத்தின் ஆசிரியர்கள் கூறுகிறபடி படிப்படியாகக் கூடப்போக்க முடியவில்லை. புள்ளிவிபரத்தை எடுத்துப் பார்த்தால் படிப்படியாகவும், சில விசேஷ சந்தர்ப்பங்களில் ஒரே படியாகவும் இது அதிகப்பட்டுவிட்டது என்பதைக் காண்போம். காரணம் இன்று இருந்துவரும் பொருளாதார அமைப்பு லாப நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டிருக்கிறது. இந்த அமைப்பு முறை பொதுமக்களின் நன்மைக்கான பொருளாதார அமைப்பு முறையாக மாறுதவரையில், இந்த வரிகளினால் எதிர்பார்த்த பயனை அடைய முடியாது. குற்றம் செய்தவனே அந்தக்குற்றத்தை விசாரிக்கும் நியாயாதிபதியாக இருக்கிற கதையாகத் தான் முடியும்.

நமது தொழிற்சாலை முதலாளிகள் விரும்புகிற வண்ணம் இன்றைய விவசாயத்தில் அங்கொன்றும் இங்கொன்றுமாக இரண்டொரு சீர்திருத்தங்களைச் செய்துவிடுவதனாலும் இந்தத் தாரதம்மியத்தை ஒழித்துவிடமுடியாது. ஏதோ சில மேற்பூச்சான சீர்திருத்தங்களின் மூலம் இன்று நாம் காணும் இந்திய விவசாயத்தைத் திருத்திவிடலாம் என்று நினைக்கிற மனநிலை வியக்கத்தக்கதாக இருக்கிறது. இன்றைய இந்திய விவசாயத்தில் சீர்திருத்தம் அல்ல, புரட்சி ஏற்படவேண்டும். அப்படிப் புரட்சி ஏற்படாதவரையில் சொத்துரிமையில் இன்று நாம் காணும் பயங்கரமான தாரதம்மியங்களை ஒழித்துவிடலாம் என்று எண்ணுவது வெறும் கனவாகும்.

உற்பத்தி சாதனங்கள் ஒரு சிலருக்கே சொந்தமாயிராமல் பலருக்கும் அவற்றில் பங்கிருக்கவேண்டுமென்று இந்தத்திட்ட ஆசிரியர்கள் கூறுகிறார்கள். அதற்கு ஜாயிண்ட் ஸ்டாக் கம்பெனிகளின் பங்குகள் பலர் கைக்குப் போகவேண்டுமென்று ஆலோசனை சொல்லுகிறார்கள். முதலாளித்துவமுறையை அப்படியே வைத்துக்கொண்டு, ஜாயிண்ட் ஸ்டாக் கம்பெனிகளின் பங்குகளைமட்டும் பலர் கைக்குப்போய்ச் சேரும்படிசெய்துவிடுவதனால் என்ன பிரமாதமான பலன் ஏற்பட்டுவிடக்கூடும்? நமது தொழிலாளர்களும், விவசாயிகளும் இந்தப்பங்குகளை வாங்குகிற நிலையிலா இருக்கிறார்கள்? அவர்கள் சொல்லுகிறபடி பலர் கைக்கு இந்தப்

பங்குகள் போய்ச்சேருகின்றன என்றே வைத்துக்கொள்வோம். அப்போது தான் என்ன? சொத்துரிமையிலும், வருமானத்திலுமுள்ள தாரதம்மியத்தைக் குறைத்துவிடவா முடியும்? நல்லெண்ணங்களைக்கொண்டு தான் நரகம் சிருஷ்டிக்கப்பட்டது என்பது ஆங்கிலப்பழமொழி. முதலாளித்துவமும் நல்லெண்ணங்களோடு தான் காரியத்தைத் துவக்குகிறது. ஆனால் விளைவு விபரீதமாக முடிந்துவிடுகிறது. ரிஸர்வ்பாங்கை நிறுவியபோது ஒருவருக்கு ஐந்து பங்குகளுக்கு அதிகமாகக் கொடுக்கக் கூடாது என்ற சட்டம் வலியுறுத்தப்பட்டது. ஆயினும் அந்த ரிஸர்வ் பாங்கு இன்று இந்திய மக்களின் பாங்காக இருக்கிறதா அல்லது பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் பாங்காக இருக்கிறதா என்பது சொல்லாமலே விளங்கும். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் சூழ்ச்சி இது என்று சொல்லலாம். நமது சொந்தமுதலாளிகளையே எடுத்துக்கொள்ளுவோம். இந்தியாவிலுள்ள ஜாயிண்ட் ஸ்டாக் கம்பெனிகளில் பெரும்பான்மையான கம்பெனிகளின் பங்குகள் ஒரு சிலருக்கே சொந்தமாயிருக்கின்றன என்பது உண்மையே. சில கம்பெனிகளின் பங்குகள் பலருக்குச் சொந்தமாகவும் இருக்கின்றன. ஆயினும் இரண்டாவது சொன்ன இந்தக் கம்பெனிகளில் உண்மையிலேயே எவ்வளவு லாபம் வந்தாலும் கம்பெனியின் கணக்குப்படி லாபம் குறைவாகவே இருக்கும், சில சமயம் நஷ்டம் கூடவந்துவிடும். இதற்கு என்ன காரணம்? கம்பெனிகளின் டைரக்டர்கள், மானேஜிங் டைரக்டர் களாயுள்ளவர்கள் செய்கிற செப்பிடுவித்தை தான் காரணம். தங்கள் சொந்த லாபத்தை அதிகப்படுத்திக்கொள்ள அவர்கள் இரண்டு விதமான முறைகளைக் கையாளுகிறார்கள். ஒன்று, ஒரு நெருக்கடியான சந்தர்ப்பத்தில்—நெருக்கடி தானாக ஏற்படாவிட்டால் அதை உற்பத்தி செய்வது அவர்களுக்கு அவ்வளவு பிரமாதமான காரியமல்ல—மலிவான விலைக்குப் பெரும்பாலான பங்குகளை வாங்கிவிடுவது; இரண்டு, பங்குகளை வாங்காமலேயே கம்பெனிக்கு நியாயமாகவரும் லாபத்தைப் பல அற்புதமான முறைகளைக் கையாண்டு அதைத் தங்கள் சொந்தலாபமாக்கிக் கொள்வது. இவ்வளவு லாகவமாகக் காரியங்களைச் செய்யும் திறமை நமது முதலாளிமார்களுக்கு இருக்கும்போது, பங்குகள் பலர் கைக்குப் போகிற காரணத்தினால் மட்டும் சொத்துரிமையிலும் வருமானத்திலும் உள்ள தாரதம்மியத்தைக் குறைத்துவிடவோ, ஒழித்துவிடவோ முடியும் என்று எண்ணினால் அந்த எண்ணத்தை என்னவென்று சொல்வது?

ஆனால் இந்தத் திட்டத்தின் ஆசிரியர்களின் உண்மையான நோக்கம் என்ன வென்பதைக் கீழ்வரும் விஷயத்திலிருந்து ஒருவாறு தெரிந்து கொள்ளலாம். வருமானத்திலுள்ள தாரதம்மியத்தை ஒழிப்பதற்கு வருமானவரியைப் போலுண்டா, ஆஹா எவ்வளவு அற்புதமானவழி என்று புகழ்கிறார்கள். ஆனால் வருமானவரி விதிப்பதென்று மொத்தமாகச்சொன்னால் போதுமா? அதை எப்படி விதிப்பது என்கிற பிரசினை எழும்போது சில விதிவிலக்குகள்— வருமானத்திலுள்ள தாரதம்மியத்தை அதிகப்படுத்தும் விதிவிலக்குகள்—செய்கிறார்கள். உதாரணமாக, வருகிற லாபத்தைத் தொழிலைப்பெருக்கும் வண்ணம் உபயோகித்தால், அந்த லாபத்துக்கு விதித்தவரியைத் திருப்பிக்கொடுத்துவிடவேண்டும் என்று சொல்லுகிறார்கள். தனக்கு வருகிற லாபத்தை எந்த முதலாளி திரும்பவும் தொழிலில் போடாமலிருக்கிறார் என்று நாம் கேட்கிறோம். ஒரு குட்டி முதலாளியை ஒரு பெரிய முதலாளியாக்குவது இந்தத் தொழிற்பெருக்கமும் அதனால் கிடைக்கும் அதிகப்படியான லாபமே அல்லவா? விஷயத்தைக் கூர்ந்து கவனித்தால், உழைப்புதான் செல்வத்தைச் சிருஷ்டிக்கிறது. ஆனால் அப்படிச் சிருஷ்டித்த செல்வம் முழுவதும் உழைப்பாளிகளுக்கே கிடைத்துவிடுவதில்லை. அவர்களை வைத்து வேலை வாங்கும் முதலாளி சம்பளம் என்கிற பெயரால் அதில் ஒரு பகுதியை மட்டுமே கொடுத்துவிட்டு, எஞ்சிய பகுதியை வட்டி என்றும் லாபமென்றும் சொல்லித்தானே எடுத்துக் கொண்டு விடுகிறார். உழைப்பின் பயனாக ஏற்பட்ட போதிலும் உழைப்

பாளிகள் கைக்குப் போகாமல் லாபம் என்ற பெயரில் எடுத்துக்கொண்ட இந்தப் பகுதியைத் திரும்பவும் அவர் அதே தொழிலில் போடுகிறார் என்று வைத்துக்கொள்வோம். அப்போது தொழில் பெருகும்; முன்னைவிட அதிகமான தொழிலாளர்களுக்கு வேலை கிடைக்கும். ஆனால் முதலாளிக்கு முன்னைவிட லாபமும் அதிகமாகக் கிடைக்கும். அவருடைய லாபத்தைக் கட்டுப்படுத்தி வருமானத்திலுள்ள தாரதம்மியத்தைப் படிப்படியாகக் குறைத்து இறுதியில் ஒழித்துவிடுவதாகக் கிளம்பிய நமது தொழிற்சாலை முதலாளிகள் அந்தத் தாரதம்மியத்தைப் படிப்படியாக அதிகப்படுத்துவதற் கேற்ற ஆலோசனையைக் கூறுகிறார்கள். வருமான வரியைக் கடுமையாக விதிக்க வேண்டுமென்று சொல்லிக்கொண்டு, அதன் பெயரால் இந்த ஆலோசனையை அவர்கள் கூறும்போது நமக்குச் சிரிப்பதா, கோபப் படுவதா என்று புரியவில்லை.

தொழிற்சாலைகளையெல்லாம் ஒரே பகுதியில் வைத்துவிடாமல் பல இடங்களில் வைக்கவேண்டும், கூட்டுழைப்புத் தொழில்களை அபிவிருத்தி செய்யவேண்டும் என்கிற ஆலோசனைகள் வரவேற்கத் தக்கவையே. தொழிற்சாலைகளைப் பல பகுதிகளில் ஸ்தாபிப்பதில் பல நன்மைகள் ஏற்படும் என்பதில் ஐயமில்லை. தொழிற்சாலைகளில் உற்பத்தியாகும் சாமான்களுக்காக ஒரு பகுதி இன்னொரு பகுதியை அதிகப்படியாக நம்பி யிருக்கவேண்டிய அவசியமும், தொழிற் பெருக்கத்தால் சமூக அமைப்பில் ஏற்படுகிற அபிவிருத்தியை இழந்துவிடுகிற நஷ்டமும், ஒரு பகுதியிலிருந்து இன்னொரு பகுதிக்குச் சாமான்களைக்கொண்டு செல்லுகிறதனால் உண்டா கும் பொருட்செலவு, காலதாமதம்போன்ற கஷ்டங்களும் இன்னும் பலவித மான கஷ்டங்களும் ஏற்படாதபடி தடுத்துவிடலாம். ஆனால் இந்தத்திட்ட ஆசிரியர்கள் எதிர்பார்க்கிறபடி, முதலாளிகளின் போக்கிற்கு இடம் கொடுக்கும் பொருளாதார அமைப்பில் வருமானத்திலும் சொத்துரிமை யிலும் ஏற்படுகிற தாரதம்மியத்தை ஒழிப்பதற்கோ குறைப்பதற்கோ இத னால் பெரிய உதவி ஒன்றும் ஏற்பட்டுவிடாது.

இந்தக் காரியத்தைக் கூட்டுழைப்புத் தொழில்களினால் சாதித்துவிடுவ தென்பதும் முடியாத காரியம். ஏனெனில் பெரிய முதல் போட்டுச் செய்யும் பிரமாண்டமான தொழில்களோடு கூட்டுழைப்புத் தொழில்கள் போட்டி போட்டு வெற்றியடைவது அசாத்தியம். மூலத்தொழில்களுக் குரிய சாதனங்கள் இல்லாமலிருக்கும் ஸ்விட்ஜர்லாந்து, டென்மார்க் போன்ற சிறிய நாடுகளில் கூட்டுழைப்புத் தொழில்கள் வெற்றியடைய லாம். லாபத்துக்காகவன்றி, பொதுத்தேவைக்கான முறையில் பொருளை உற்பத்தி செய்யும் சமதர்மப் பொருளாதார அமைப்பையுடைய சோவியத் ரஷ்யாவில் கூட்டுழைப்புத் தொழில்கள் வெற்றி யடையலாம். ஆனால் சமதர்ம உடையில் முழுக்க முழுக்க முதலாளிகளின் கோட்டையாக இருக்கும் இந்தியாவில் கூட்டுழைப்புத் தொழில்கள் வெற்றியடைவது அவ்வளவு எளிதான காரியம் அல்ல.

மூலத்தொழில்களை அரசாங்கத்தின் கட்டுப்பாட்டின்கீழ்க் கொண்டு வருவது, சில விசேஷத்தொழில்களை அரசாங்கத்துக்கே சொந்தமாக்கி விடுவது, அல்லது அவைகளை அரசாங்கத்தின் நிர்வாகத்துக்குமட்டும் உட்படுத்துவது ஆகிய இவைகளாலும் வருமானத்தில் ஏற்படும் தாரதம் மியத்தைக் குறைத்தல் கூடும் என்று திட்டத்தின் ஆசிரியர்கள் கூறு கிறார்கள். வருமானவரி விதிப்பது, விவசாயத்தில் மேற்பூச்சான சில சீர்திருத்தங்களைச் செய்வது, கிராமக் கைத்தொழிலை வளர்ப்பது, ஜாயிண்ட் ஸ்டாக் கம்பெனிகளின் பங்குகள் பலர் கைக்குப்போகும்படி செய்வது, தொழிற்சாலைகளை நாட்டின் பல்பாகங்களிலும் அமைப்பது, கூட்டுழைப்புத்தொழில்களை வளர்ப்பது, இன்னும் இவைபோன்ற காரி யங்களையெல்லாம் முதலாளித்துவ அமைப்பை ஒரு இம்மியும் மாற்றுமோ

செய்யமுடியும். ஆனால் மூலத்தொழில்களை அரசாங்கத்துக்குச் சொந்தமாக்கிவிடுவது அப்படியல்ல. பொதுமக்களுக்கு முற்றிலும் பொறுப்பான அரசாங்கம் ஏற்பட்டு, அந்த அரசாங்கத்துக்கு மூலத்தொழில்களையும் இதர முக்கியமான தொழில்களையும் சொந்தமாக்கி விடுவதென்றால், அது முதலாளித்துவ அமைப்பை இனம் கண்டு கொள்ளமுடியாதபடி மாற்றி விடும். ஆயினும் இவ்வளவு முக்கியமான விஷயத்தை முக்கிய மற்றது போலக்காட்டி, மேலே சொன்ன சீர்திருத்த ஜாப்தாவில் இதையும் ஒரு எண்ணிக்கையாகச் சேர்த்திருக்கிறார்கள். இந்தப் பிரசினையைப்பற்றி நாம் விரிவாகப் பிறகு ஆராயலாம்.

### ஸ்டகானவ் இயக்கமும் தாரதம்மியமும்

சொத்துரிமையிலும் வருமானத்திலும் ஏற்பட்டிருக்கும் தாரதம்மியத்தைக் குறைப்பதற்கு ஆலோசனை சொல்லிவந்த நமது தொழிற்சாலை முதலாளிகள், எப்படியிருந்தாலும் தாரதம்மியங்கள் இருந்தால்தான் நாட்டிற்குச்சேமம், அவைகளை முற்றிலும் ஒழித்துவிடுவது விரும்பத்தக்கதல்ல வென்று சொல்லுகிறார்கள். செயல்த்திறமைக்கும், அதிகமாக உற்பத்தி செய்கிற சக்திக்கும் தக்கபடி வருமானத்தில் தாரதம்மியங்களை ஏற்படுத்துவது தான் நல்லது, ஏதோ குறைந்த பட்சவருமானம் எல்லோருக்கும் கிடைத்தால் போதும், அதற்குமேல் எவ்வளவு வேண்டுமானாலும் தாரதம்மியங்கள் இருக்கலாம் என்பது அவர்களது அபிப்பிராயம். இந்தத் தாரதம்மியங்கள் இல்லாவிட்டால் தொழிலில் திறமையும் ஊக்கமும் ஏற்படாதாம். இதற்கு சோவியத் ரஷ்யாவையே அவர்கள் உதாரணமாக எடுத்துக் காட்டுகிறார்கள். ஸ்டகானவ் இயக்கத்திற்கு சோவியத் ரஷ்யா காட்டும் உற்சாகத்தைப் பாருங்கள் என்கிறார்கள். ஆரம்பத்தில் ஏதோ உற்சாகவசப்பட்டு எல்லோருடைய வருமானத்தையும் சமமாக்கப்போகிறோம் என்று மார்தட்டிக்கொண்டு கிளம்பிய சோவியத்ரஷ்யா இன்று ஸ்டகானவ் இயக்கத்திற்கும் தாரதம்மியத்திற்கும் ஊக்கமளிப்பதைப் பார்த்தீர்களா என்று வெற்றியுணர்ச்சியோடு கேட்கிறார்கள். இதிலும் உங்களுக்குத் திருப்தி ஏற்படவில்லையென்றால் கெய்ன்ஸ் பிரபு சொன்னதைக் கேளுங்கள் என்கிறார்கள். "செல்வத்திலும், வருமானத்திலும் சிறப்பான தாரதம்மியங்கள் இருப்பது சமுதாய நலனுக்கேயன்றி மனோதத்துவ முறைப்படியும் நியாயமான காரியமே. ஆனால் கடலுக்கும் மடுவுக்கும் உள்ள வித்தியாசத்தைப்போல அவ்வளவு பெரிய வித்தியாசங்கள் இருக்கக்கூடாது (வித்தியாசம் எவ்வளவு இருக்கலாம் என்று கெய்ன்ஸ் பிரபு சொல்லவில்லை). மனிதனிடம் அரும்பெரும் காரியங்களை ஆற்றும் திறமைபொதிந்து கிடக்கிறது. இந்தத் திறமை வெளிப்படவேண்டுமென்றால், பணத்தைச் சேர்க்கிற ஆசையும் அந்த ஆசையைப் பூர்த்தி செய்துகொள்ளுவதற்கு ஏதுவான சொந்தச் சொத்துரிமை என்கிற சூழ்நிலையும் இருந்து தான் ஆகவேண்டும். மேலும் தீயவழிகளில் மனசைச் செலுத்தாமலிருப்பதற்கும் இவை உதவியாக இருக்கும்," என்று கெய்ன்ஸ் பிரபு சொல்லுகிறார். அதை இந்தத்திட்ட ஆசிரியர்கள் அப்படியே ஆமோதிக்கிறார்கள். இந்தியாவில் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை நிரந்தரமாக நிலைக்கச் செய்வதற்கு ஆலோசனை கூறும் கெய்ன்ஸ் பிரபுவும், லண்டன் 'எகானமிஸ்ட்'பத்திரிகையும் பொருளாதார அமைப்பு முறை சம்பந்தமாகக் கொண்டுள்ள அபிப்பிராயத்தை நமது தொழிற்சாலை முதலாளிகள் அப்படியே ஏற்றுக் கொள்வது குறிப்பிடத்தக்கது.

சோவியத் ரஷ்யாவில் ஸ்டகானவ் இயக்கம் தோன்றியதற்குப் பணத்தைச் சேர்க்கவேண்டுமென்கிற வெறியும், சொந்தச் சொத்துரிமையும் காரணமல்ல. முதலாளித்துவ அமைப்பில் மனிதனை ஈவிரக்கமற்ற இயந்திரம்போல ஆக்கும் இவற்றிற்குச் சமதர்ம அமைப்பில் இடமில்லை. இங்கே ஒரு உயர்ந்தரகமான போட்டியை, சமதர்மப்போட்டியைக் காண்கிறோம்,

கேவலம் பிறருடைய உழைப்பின் பயனைத் திருடிச் சொத்துச் சேர்க்க வேண்டுமென்கிற உணர்ச்சிக்குப் பதிலாக, உற்பத்தியையும் உற்பத்தி சாதனங்களையும் விரைவில் பெருக்கி, சமதர்ம அமைப்பைப் பூரணமான பொதுவுடைமை அமைப்பாக மாற்றவேண்டுமென்கிற உணர்ச்சியைக் காண்கிறோம். ஸ்டகானவ் இயக்கத்தில் காணும் ஒரு வேகம், ஆத்திரம் எல்லாம் இந்தஉணர்ச்சியை அடிப்படையாகக்கொண்டதே. அது காரண மாகவே, இந்த உணர்ச்சியிலிருந்து பிறந்த போட்டி சமுதாய நலனில் கண்ணும் கருத்துமாயிருக்கிறது. முதலாளித்துவ அமைப்பில் காணும் போட்டியோ தன்னலத்திலேதான் கருத்தைச் செலுத்துகிறது. ஸ்டகானவ் இயக்கம் பொருளுற்பத்தி முறையில் ஒரு புரட்சியை உண்டாக்கி, சமதர்ம அமைப்பிலிருந்து பொதுவுடைமை அமைப்பிற்கு மாறுவதற்கு ஒருமுக்கிய சாதனமாயிருக்கிறது. உடலை அடிப்படையாகக் கொண்டு செய்கிற வேலைக்கும் மனதை அடிப்படையாகக்கொண்டு செய்கிற வேலைக்குமுள்ள வித்தியாசத்தை ஒழிக்க அடிகோலியாக இருக்கிறது என்கிற காரணத்தி னுலேதான் சோவியத் ரஷ்யா ஸ்டகானவ் இயக்கத்திற்கு இவ்வளவு ஊக்கமளித்துவருகிறது.

சோவியத் ரஷ்யாவில் வேலையின் ரகத்துக்கும் அளவுக்கும் தக்கபடி சம்பளம் என்பது உண்மைதான். சம்பளத்தில் ஏதோ கொஞ்சம் ஏற்ற இறக்கம் இருக்கத்தான் செய்கிறது ஆனால் கேவலம் தன்னல வெறி யைக் கிளறிவிடுவதற்காகச் செய்த உபாயம் அல்ல இது. அங்கே சமதர்ம அமைப்பு சொந்த சொத்துரிமையைப் பூரணமாக ஒழித்துவிட்டது; வரு மானத்திலும் சம்பளத்திலுள்ள பெரிய வித்தியாசங்களையும் போக்கடித்து விட்டது. ஆனால் இப்போதிருக்கிற சிறிய வித்தியாசங்களை அதனால் போக்கடிக்க முடியவில்லை. செல்வம் வேண்டிய அளவு பெருகிப் பொது வுடைமைச் சமுதாயம் ஏற்படும்போது தான் "சக்திக்குத்தக்கபடி வேலை, தேவைக்குத் தக்கபடி ஊதியம்" என்ற சித்தாந்தத்தைக் கிரியாம்சையில் கொண்டு வரமுடியும். சோவியத் ரஷ்யா பொதுவுடைமைச் சமுதாயமாக இன்னும் வளராத காரணத்தினுலேதான் அங்கே இந்த வித்தியாசங்கள் இருக்கின்றன. ஆயினும் இந்த வித்தியாசங்களால் முதலாளித்துவம் திரும்பத் தலையெடுத்துவிடும் என்று சந்தோஷமடைய இடமில்லை. ஏனெ னில் அதிகப்படியாகக் கிடைக்கும் இந்த வருமானத்தைத் தாராள மாகச் செலவழிக்கலாம் என்பதைத் தவிர, அதைத் தொழிலில் போட்டுப் பெருக்கி ஒரு குட்டி முதலாளியாகவோ, பெரிய முதலாளி யாகவோ வந்துவிட முடியாது. இந்த அடிப்படையான வித்தியாசத்தை மறந்து சோவியத் ரஷ்யா வருமானத்தில் தாரதம்மியங்களுக்கு இடம் கொடுக்கிறது, சுயநல வெறியை அடிப்படையாகக் கொண்ட போட்டி மனப்பான்மையை வளர்க்கிறது, முதலாளித்துவத்திற்குத் திரும்புகிறது என்று ஆனந்தம் அடைவதில் அர்த்தமில்லை. சொந்தச் சொத்துரிமையை நிலைநாட்டுவதற்கு சோவியத் ரஷ்யாவின் உதாரணத்தைக் காட்டிப் பொது மக்களின் அறிவைக் குழப்ப முயல்வதும் அவ்வளவு சரியான காரியம் அல்ல.

பணத்தைச் சேர்க்க வேண்டுமென்கிற வெறியும், சொந்தச் சொத்துரி மையும் முதலாளித்துவத்துக்கு உயிர் என்று சொல்லிவிடலாம். இவை இரண்டுமே இன்று தேவைக்குத் தக்கமுறையில் உற்பத்தி சாதனங்களையும் உற்பத்தியையும் பெருக்கி, அப்படிப் பெருக்கியவற்றை நியாயமாக விநியோகித்துப் பொதுமக்களின் வாழ்க்கைத்தரத்தை உயர்த்தவதற்குப் பெரிய தடங்கலாக இருக்கின்றன. இந்தத் தடங்கலை நீக்குவதற்கென்றே நாம் திட்டம் வகுக்கிறோம். அப்படி வகுக்கும் திட்டத்தில் அதே பண வெறியும் சொந்தச் சொத்துரிமையும் இருக்கவேண்டுமென்று அவை களுக்கு வக்காலத்து வாங்கிக்கொண்டு பேசுகிறார்கள் நமது தொழிற்சாலை முதலாளிகள். தங்களுக்குச் சாதகமாக முதலாளித்துவத்தின் பிரதிநிதியாக

விளங்கும் கெய்ன்ஸ் பிரபுவை ஒருபுறமும், பூரண சமதர்மப் பொலிவோடு விளங்கும் ஸோவியத் ரஷ்யாவை இன்னொருபுறமும் உதாரணமாக எடுத்துக் காட்டுகிறார்கள்!

உழைப்புதான் செல்வத்தைச் சிருஷ்டிக்கிறது என்பது அடிப்படையான விஷயம். ஆனால் பணமும், அந்தப் பணத்தை தொழிலில் உபயோகப் படுத்தும் தொழிற்சாலை முதலாளியும், உழைப்பும் ஆகிய இந்த மூன்று அம்சங்களும் சேர்ந்துதான் செல்வத்தைச் சிருஷ்டிக்கின்றன என்பது இந்தத் திட்டத்தின் ஆசிரியர்களின் சித்தாந்தம். ஆதலால் எப்படி உழைப்புக்காகத் தொழிலாளர்களுக்குச் சம்பளம் கொடுக்கிறோமோ, அதே போன்று போட்ட முதலுக்காக வட்டியும், தொழிற்சாலை முதலாளி எடுத்துக்கொண்ட சிரமத்திற்காக லாபமும் கொடுக்கவேண்டும்; அதிலும் இப்போதிருக்கிறமுறை அப்படியே இருக்கவேண்டுமென்று சொல்லுகிறார்கள். குறைந்த பட்சமாகக் கொடுக்கவேண்டிய சம்பளத்தை நிர்ணயிப்பது, உற்பத்திப் பெருக்கத்துக்கு உதவி செய்யும் வண்ணம் வட்டி விகிதத்தைக் கட்டுப்படுத்துவது, விலைகளையும், கம்பெனிகளிலிருந்து கொடுக்கும் லாப விகிதங்களையும் கட்டுப்படுத்தி லாபத்தைக் கட்டுப்படுத்துவது – இவற்றைச் செய்தால் போதும், வேறு மாற்றங்கள் செய்யத் தேவையில்லை. ஆயினும் இந்த மாற்றங்களைச் செய்யும்போது, உற்பத்தியின் விரிவையும் தொழில்த் திறமையையும் அபிவிருத்தி செய்வதற்கு ஏதுவான உற்சாகத்தைக்கெடுத்து விடக்கூடாது. அதாவது பணத்தைச் சேர்க்கவேண்டுமென்கிற வெறியையும், அதற்குச் சாதகமான சொந்தச் சொத்துரிமை என்கிற சூழ்நிலையையும் தொலைத்துவிடக்கூடாது என்கிறார்கள். இதற்கு என்ன அர்த்தம்? விலையைக் கட்டுப்படுத்த வேண்டும்; மரணவரி, வருமானவரி போன்ற வரிகளைக் கடுமையாக விதிக்கவேண்டும்; லாபத்தையே கட்டுப்படுத்த வேண்டும்; மூலத்தொழில்களை அரசாங்கத்தின் கட்டுப்பாட்டுக் கீழ்கொண்டு வரவேண்டும் என்று சொல்லுகிற இந்த ஆலோசனைகளெல்லாம் முதலாளித்துவத்தைப் புரட்சிகரமான ஆடை அணிவித்துக் காட்டுவதற்கேயன்றி வேறில்லை. இந்த ஆலோசனைகளை அப்படியே நாம் ஏற்றுக்கொண்டால், பசுத்தோல் போர்த்த புலியின் கதையாகத்தான் வந்து முடியும்.

## 2. வருமானத்தை உயர்த்துவது எப்படி

வாழ்க்கைத்தரத்தை அதிகப்படியாக உயர்த்தாவிட்டாலும் குறைந்த பட்சம் என்று கருதக்கூடிய அளவுக்காவது உயர்த்துவதற்கு, ஒன்று, பெரும்பான்மையான மக்களின் வருமானத்தை உயர்த்தவேண்டும், இரண்டு, தனிப்பட்ட மனிதர்களின் செலவைக் குறைப்பதற்கு ஏதுவாக பொதுநல விஷயங்களில் அரசாங்கம் பொருளைச் செலவழிப்பதற்குரிய முறையைக் கடைப்பிடிக்க வேண்டும் என்பது இந்தத் திட்டத்தின் ஆசிரியர்களின் நோக்கம்.

### எல்லோருக்கும் வேலை

எல்லோருக்கும் வேலை கிடைக்கும்படியாகச் செய்வது, உற்பத்தி செய்வதில் தொழிலாளர்களுக்குள்ள திறமையை அபிவிருத்தி செய்வது, நகரங்களிலும் நாட்டுப் புறங்களிலும் சம்பள விகிதத்தைக் கூட்டுவது, விவசாயப் பொருள்களின் விலைகளில் அதிக ஏற்ற இறக்கம் ஏற்படாதபடி பார்த்துக்கொள்வது, குடியானவர்களிடையே கூட்டுழைப்புச் சங்கங்களை நிறுவுவது, நில சம்பந்தமான சட்டங்களில் சீர்திருத்தம் செய்வது,—இவைகள் மூலம் பெரும்பான்மையான மக்களின் வருமானத்தை உயர்த்திவிடலாம் என்று இந்தத் திட்டத்தில் கூறப்படுகிறது. எல்லோருக்கும் வேலையும் நல்ல சம்பளமும் கிடைக்கவேண்டும் என்பது ரொம்ப விரும்பத்தக்க

காரியம்தான். ஆயினும் இந்த நல்ல காரியத்தை எப்படிச் சாதிப்பது என்பதுதான் இன்றையப் பிரசினை. இந்தப் பிரசினை சாமானியமான பிரசினைபோலத் தோன்றலாம். ஆனால் உண்மை அப்படியல்ல. முதலாளித்துவம் வளர்ந்து ஆக்கமடைந்த காலத்திலிருந்தே இருந்துவரும் ஒரு பண்டையப் பிரசினையாகும் இது. இதைத் திருப்திகரமாகத் தீர்த்து வைப்பதற்குப் பொருளாதார அமைப்பின் அடிப்படையையே மாற்றவேண்டி வரும். அது எப்படி என்பதைச் சற்று பார்ப்போம்.

மூலத் தொழில்களையும் இதர தொழில்களையும் பெருக்குகிறோம் என்று வைத்துக் கொள்ளுவோம். தொழிலைப் பெருக்குவதற்காகச் சிருஷ்டித்த புதிய இயந்திரங்களுக்கு வேலை கொடுத்துக் கொண்டிருக்க வேண்டும் என்பது தெரிந்ததே. அவை நாள்தோறும் இயங்கிக்கொண்டிருக்க வேண்டுமென்றால் ஒன்றுக்குப் பத்தாக அவை உற்பத்தி செய்யும் சாமான்கள் விலையாகவேண்டும். இந்தச் சாமான்களை விற்பதற்கு முக்கியமான சந்தை தொழிலாளர்களும் குடியானவர்களுமே. தொழிலாளர்களுக்கு நல்ல சம்பளம் கிடைத்தாலொழிய அவர்கள் இந்தச் சாமான்களை வாங்குவதெப்படி? அதாவது தொழிலாளர்களின் வாங்குகிற சக்தி அதிகப்படவேண்டும்.

ஆனால் முதலாளித்துவ முறையில் தவிர்க்க முடியாத பல காரணங்களால் லாப வீதம் குறைந்து கொண்டே போகிறது இயல்பாக இருக்கிறது. லாப வீதத்தைக் குறையாதபடி பார்த்துக் கொள்ளுகிற பிரசினை லாபத்திற்காகவே தொழிற்சாலைகளை நடத்தும் முதலாளிகளுக்கு ஒரு நிரந்தரமான பிரசினையாக இருக்கிறது. லாப வீதம் குறையாமலிருப்பதற்கு அவர்கள் பல வழிகளைப் பின்பற்றுகிறார்கள். அவற்றில் அவர்களுக்கு ரொம்பப் பிடித்ததும், அடிக்கடி கையாளுவதும் தொழிலாளர்களின் சம்பளத்தைக் குறைப்பதே யாகும். தொழிலாளர்களின் சம்பளத்தைக் குறைப்பதனால் லாபம் அதிகப்படும் என்றாலும், தொழிலாளர்களின் வாங்குகிற சக்தியும் குறையும். அந்தக் குறைவுக்குத் தக்கபடி சாமான்களுக்குள்ள தேவையும், அந்தச் சாமான்களை உற்பத்தி செய்வதற்கு அவசியப்படும் மூலதனத்திற்குள்ள கிராக்கியும் குறையும். அப்போது லாபவீதம் தானாகவே குறைந்துவிடும். லாபவீதம் குறைந்தால் முதலாளிகள் தொழிற்சாலைகளை மூடிவிடுவார்கள். அந்தத் தொழிற்சாலைகளில் வேலை பார்க்கும் தொழிலாளர்கள் அப்போது வேலையில்லாத் திண்டாட்டம் என்கிற விஷச்சுழலில் அகப்பட்டுக் கொள்ளுவார்கள்.

தொழிற்சாலைகளில் உற்பத்தியாகும் சாமான்களைத் தொழிலாளர்கள் மட்டும் வாங்கினாலும் போதாது. பெரும்பான்மையான மக்களும் அவைகளை வாங்க வேண்டும். இந்தியா போன்ற நாடுகளில் பெரும்பான்மையான மக்கள் குடியானவர்களே. நமது குடியானவர்கள் கைக்குப் போதிய பணம் போய்ச் சேர்ந்து அவர்கள் நமது தொழிற்சாலைகளில் உற்பத்தியாகும் சாமான்களை வாங்குகிற நிலையில் இருக்கவேண்டும். அப்போதுதான் நாம் புதிதாகச் சிருஷ்டித்து விட்ட இயந்திரங்களெல்லாம் இயங்க முடியும். ஆனால் நமது குடியானவர்களும் விவசாயத் தொழிலாளர்களும் இன்று ரொம்பப் பரிதாபகரமான நிலையில் இருக்கிறார்கள். ஒரு நாளைக்கு ஒரு வேளை திருப்திகரமாகச் சாப்பிட முடியாத நிலையில் அவர்கள் எப்படித் தொழிற்சாலைகளில் உற்பத்தியாகும் சாமான்களை வாங்க முடியும்? அதற்கு நமது இன்றைய விவசாயத்தில் புரட்சிகரமான மாற்றங்களைக் கொண்டுவரவேண்டும். வாய்க்கால் வெட்டுவதனாலும், வரப்பை உயர்த்துவதனாலும், உரம் போடுவதனாலும் புரட்சிகரமான மாற்றங்களைக் கொண்டுவர முடியாது. விவசாயப் பொருள்களின் விலைகளில் அதிக ஏற்ற இறக்கம் இல்லாமல் செய்து விடுவதனாலும், தற்போதிருக்கிற அமைப்பைச் சிதையவிடாமல் வைத்துக்கொண்டு கூட்டுழைப்புச் சங்கங்களுக்கு உற்சாகமளிப்பதனாலும் இந்தக் காரியத்தைச் சாதித்து விடவும் முடியாது.

இன்று, சாகுபடியின் கீழ் இருக்கிற நிலத்தில் 20 சதவிகிதம் தான் தனிப்பட்ட குடியானவர்கள் கையில் இருக்கிறது. எஞ்சிய 80 சதவிகிதம் நிலச்சுவான்தார் கையிலும் குடியானவர்களுக்குக் கடன் கொடுத்த முதலாளியின் கையிலும் இருக்கிறது. நிலச்சுவான்தார்கள் கையிலிருக்கிற நிலத்தை மெள்ள மெள்ள தனிப்பட்ட குடியானவர்களுக்கு மாற்றி விடுவதற்கு, நிலச்சுவான்தாரின் கடமைகளை அரசாங்கமே ஏற்றுக்கொண்டு, நிலச்சுவான்தாருக்கு வருஷா வருஷம் அந்த நிலங்கள் மூலம் செல்லவேண்டிய கிஸ்தியைச் செலுத்திவிட வேண்டுமென்று நமது தொழிற்சாலை முதலாளிகள் கூறுகிறார்கள். அரசாங்கம் பணக்கார அரசாங்கமான பிறகு, நிலச்சுவான்தார்களுக்கு அந்த நிலங்களிலுள்ள பாத்தியதைக்காக நியாயமான ஒரு மொத்தத் தொகையைக் கொடுத்துவிட வேண்டுமென்றும் அவர்கள் கூறுகிறார்கள். இன்று ஜமீன்தார்களாகத் திகழும் பிரமுகர்கள் ஆதிகாலத்தில் பிரிட்டிஷ் அரசாங்கம் கிஸ்தி வசூலிக்க நியமித்த ஆசாமிகளே. பிரிட்டிஷ் அரசாங்கம் நிலவரி வசூலிக்க நியமித்த அந்த ஆசாமிகளுக்குப் பொதுஜனங்களுக்குப் பொறுப்புள்ள இந்திய அரசாங்கம் கிஸ்தி செலுத்திவர வேண்டும், அதாவது கிஸ்தி வசூலித்துக் கொடுக்கவேண்டும். இது தான் நிலத்திலுள்ள சொந்தச் சொத்துரிமையை மாற்றுவதற்கு நமது முதலாளிகள் கூறும் புரட்சிகரமான ஆலோசனை. இதோடு நிலத்தின் மீது விதிக்கும் வரியின் பளுவைக் குறைத்து நிலவரி எல்லா இடத்திலும் சமமாக இருக்கும்படி சீர்திருத்தம் செய்தால் விவசாய அமைப்பையே புதுக்கி விடலாம் என்பது இவர்களின் எண்ணம். உள்ளூரச் செல்லரித்துப் போயிருக்கும் நமது விவசாயத்தைச் சீர்திருத்தம் என்கிற வர்ணமடித்துப் புதுக்கிவிடுவதனால் நமது விவசாயிகளின் நிலையில் ஒரு இம்மிகூட அபிவிருத்தியேற்படப் போவதில்லை. நமது விவசாயிகளின் நிலை அபிவிருத்தியடையாவிட்டால் அவர்கள் நமது தொழிற்சாலைகளில் செய்யும் சாமான்களை வாங்கவும் முடியாது.

ஆகவே, தொழிலாளர்களும் விவசாயிகளும் அழிபண்டங்களை வாங்க முடியாத ஒரு நிலையில் தொழிலைப் பெருக்கி அதன் மூலம் எல்லோருக்கும் வேலை கொடுத்துவிடலாம் என்று எப்படிச் சொல்வது? வேலையே கிடைக்காதபோது, குறைந்த பட்சச் சம்பளப் பிரசினை எழவே இடமில்லை. சாப்பாடில்லை யென்று சொல்லும் போது, இலைபீற்றல் என்கிற கதையாக வல்லவா இருக்கிறது இது. கவலைக்கிடமான இந்த நிலையில் பெரும்பான்மையான மக்களின் வருமானத்தை உயர்த்துவது எப்படி சாத்தியமாகும்? இதைச் சாத்தியமாகச் செய்யவேண்டுமென்றால் அதற்கு ஒரே ஒரு வழிதான் உண்டு: லாபநோக்கத்திற்காகப் பண்டங்களை உற்பத்தி செய்யாமல் பொதுத் தேவையைப் பூர்த்தி செய்வதற்காக உற்பத்தி செய்யவேண்டும்; இன்றைய விவசாயத்தை நிலச்சுவான்தாரிடமிருந்தும் கடனிலிருந்தும் மீட்டு, அதைப் புனர் நிர்மாணம் செய்யவேண்டும். ஆனால் நமது தொழிற்சாலை முதலாளிகள் இந்த வழியைப் பின்பற்றத் தயாராய் இல்லை. அதை அவர்கள் பின்பற்றத் தயாராகி விட்டார்கள் என்றால் அப்போது அவர்கள் தொழிற்சாலை முதலாளிகளாக இருப்பதும் சாத்தியமாயிராது.

## 3. புதிய ரகமான சமதர்மமா?

தேச வருமானத்தை நியாயமான முறையில் விநியோகிப்பது முதலாளித்துவ அமைப்பைச் சிதையாமல் வைத்துக் கொண்டு செய்கிற காரியங்களில் ஒன்று அல்ல என்பதையே நாம் மேலே பார்த்தோம். முதலாளித்துவம் என்கிற சக்கரம் லாப வீதம் என்கிற அச்சில் ஓடுகிறது. சரியான லாபம் வந்தாலொழிய மனிதனையோ, இயந்திரத்தையோ, மூலப்பொருள்களையோ தொழிலில் ஈடுபடுத்த முடியாது. லாபம் நன்றாக வருகிறதென்று இயந்திரங்களைச் சிருஷ்டிக்கிறார்கள். இந்த இயந்திரங்கள் முன்னையை

விடப் பன்மடங்கு அதிகமாக உற்பத்தி செய்யும் சாமான்களை விற்கப் பிறகு சந்தையைத் தேடி அலைகிறார்கள். பிறகு சந்தைக்காக இந்தியாவை யும், சீனாவையும் ஆப்பிரிக்காவையும் பிடிக்கிறார்கள். காலனிகளைக் கைப்பற்றிய காரணத்தால் சாமான்களுக்குத் தேவை அதிகப்படுகிறது. அழிபண்டங்களை உற்பத்தி செய்யும் இயந்திரங்களையே இன்னும் அதிக மாக உற்பத்தி செய்யவேண்டிய நிலை ஏற்படுகிறது. அதனால் மூலதனத் துக்கு நல்ல கிராக்கி ஏற்பட்டு லாப வீதம் உயருகிறது. ஆனால் புதிதாகச் சிருஷ்டித்த இயந்திரங்கள் தேவைக்குப் பல மடங்கு அதிகமான பண்டங் களை உற்பத்தி செய்யும் ஆற்றல் பெற்றிருக்கும் தன்மையால், அவை உற் பத்திசெய்யும் பண்டங்களை விற்பதற்கு ஏற்கெனவே பிடித்த காலனிகள் போதவில்லை. புதிய காலனிகளைப் பிடிக்கவேண்டிய அவசியம் ஏற்படு கிறது. இப்படியாகப் புதிய இயந்திரங்களைச் சிருஷ்டிப்பதும், புதிய காலனிகளைப் பிடிப்பதும் மாறி மாறி நடைபெற்று வருகிறது. ஆனால் உலகத்தில் இனிப் பிடிப்பதற்கு இடமில்லை யென்று ஏற்பட்டவுடன் முதலாளித்துவம் சிருஷ்டித்துவிட்ட இயந்திரமே அதற்கு ஆபத்தாக மாறுகிறது.

புதிய சந்தைகளைப் பிடிப்பது போல, ஜனங்களின் எண்ணிக்கை பெருகுவதனாலும் சாமான்களுக்கு அதிகத் தேவை ஏற்பட்டு லாப வீதம் குறையாமல் இருத்தல்கூடும். ஆனால் இயந்திரங்களின் சிருஷ்டிவேகத் தோடு மனிதனுடைய சிருஷ்டிவேகம் போட்டிபோட முடியுமா? ஏதோ கொஞ்சகாலம் சமாளித்துப் பார்க்கலாம். அவ்வளவுதான். அதன்பிறகு அதிகப்படியாக உற்பத்தி செய்யப்பட்டுவரும் சாமான்களுக்குத் தேவை குறைந்து, லாப வீதமும் குறைய ஆரம்பிக்கும்.

மேலே சொன்ன இரண்டு காரணங்களினாலன்றி ரயில், மோட்டார், விமானம் போன்ற புதிய போக்கு வரத்து சாதனங்களையும், இன்னும் பல புதிய விஞ்ஞான முறைகளையும் கண்டு பிடிப்பதனாலும் லாப வீதம் குறையாமலிருக்கலாம். ஆயினும், சிறிது காலத்தில் லாப வீதத்தைக் காப் பாற்றுவதற்கு உதவியாயிருந்த இவையே லாப வீதத்தைக் குறைப்பதற் குள்ள ஒரு ஆற்றல் வாய்ந்த கருவியாக மாறிவிடுகின்றன.

எனவே, எந்த வழியாகப் பார்த்தாலும் லாப வீதம் குறையத்தான் செய்கிறது. லாப வீதம் குறையும்போது அதை மூலாதாரமாகக் கொண் டிருக்கும் பொருளாதார அமைப்பும் சின்னா பின்னப்பட்டுப் போகிறது. வியாபார மந்தம், பொருளாதார நெருக்கடி, வேலையில்லாத் திண்டாட்டம், வறுமை எல்லாம் வந்து நம்மைச் சூழ்ந்துகொள்ளுகின்றன. இவ்வள வுக்கும் காரணம் என்ன? ஏன், செல்வம் அதிகப் பட்டுப் போனதுதான்! இது வேடிக்கையல்ல, உண்மை. முதலாளித்துவத்தையும் அதற்கு மூலா தாரமான லாப நோக்கத்தையும் பின்பற்றுகிறவரையில் செல்வம் ஓங்க ஓங்க வறுமையும் துன்பமும் அதிகப்படுகிற இந்தக் காரியம் நடந்து கொண்டுதான் இருக்கும். ஆகையால் லாப நோக்கம் என்கிற இந்தப் பூதத் திற்கு நமது மக்களை இரையாக்கிவிடாமல், செல்வத்தோடு நமது வாழ்க்கைத் தரமும் ஓங்கவேண்டு மென்பதற்காகத் திட்டம் வகுக்கிறோம். பொது ஜனங்களின் நன்மையைக் கோரி இப்படி வகுக்கும் திட்டத்தில் லாப நோக்கம் பின்கதவுவழியாகத் திருட்டுத்தனமாக வந்து நுழைந்து கொள் ளப் பார்க்கும். நல்லது கெடுதல் எல்லாவற்றிலும் தான் இருக்கிறது; முதலாளித்துவத்திலுள்ள நல்லதையும், சமதர்மத்திலுள்ள நல்லதையும் எடுத்துக்கொள்ளவேண்டும் என்று சொல்லும். இரண்டையும் சேர்த்தால், ஆஹா எவ்வளவு அற்புதமான உலகத்தைச் சிருஷ்டித்து விடலாம் என்று வர்ணிக்கும். இந்தப் பசப்பு வார்த்தைகளைக் கேட்டுப் பொதுஜனங்கள் ஏமாந்து போய்விடலாகாது. முதலாளித்துவத்திலுள்ள நன்மை லாப நோக்கமும் சொந்தச் சொத்துரிமையும்தான். அதிலுள்ள தீமையும்

லேவயே. இவற்றால் இன்று பொருளாதார வாழ்க்கையில் ஏற்பட்டுவரும் இன்னல்களே முதலாளித்துவத்தை இனி வைத்துக்கொள்ள நியாயமில்லை யென்பதைக் காட்டுகின்றன. லாப நோக்கத்தையும், சொந்தச் சொத்துரி மையையும் ஒழித்தால்தான் இனி மக்கள் சுகப்படமுடியும். அதனலேதான், "முதலாளித்துவமே, நீ இதுவரையில் செய்த சேவைகளுக்காக உன்னைப் பெரிதும் பாராட்டுகிறோம். இனிமேலும் நீ சேவை செய்து கொண்டிருப்பாயானல், அதை எங்களால் தாங்க முடியாது. ஆயினும் நீ கடைசியாகச் செய்யவேண்டிய உதவி ஒன்றுண்டு; தயவு செய்து எங்கள் நாட்டைவிட்டு ஓடி மறைந்து விடு. அதுதான் நாங்கள் உன்னிடம் வேண்டிக்கொள்வது," என்று பொதுமக்கள் சொல்லத் தலைப்பட்டு விட்டார்கள்.

ஆனல், நமது திட்டத்தின் ஆசிரியர்கள் என்ன சொல்லுகிறார்கள் என்று பார்ப்போம். முக்கியமாக மனிதனது உழைப்பையும் மூலப் பொருள்களையும் ஒன்று சேர்த்து நூறுக்கு நூறு பலனடைய வேண்டு மென்பதற்காகத் திட்டம் வகுக்கிறோம். ஆயினும், அதற்காகப் பொது ஜனங்களுக்கு அதிகப்படியான கஷ்டம் கொடுப்பதும், தனித்த மனித னுடைய சுதந்திரத்தை முழுதுமே பறித்து விடுவதும் விரும்பத்தக்க காரியங்கள் அல்ல. சர்வாதிகாரப் போக்கையுடைய ஜெர்மனியிலும், சோவியத் ரஷ்யாவிலும் தான் திட்டங்கள் போட்டு நிறைவேற்றமுடியும். ஜனநாயக நாடுகளில் அது சாத்தியமாகாது என்ற எண்ணம் ஏதோ இருந்துவருகிறது. இது தவறு. ஜனநாயக நாடுகள் போர்க்காலத்திற்குத் தக்கபடி உற்பத்தி சாதனங்களை ஒன்று திரட்டியும் புதிதாகச் சிருஷ்டித் தும் பொருளாதார முறையைத் திட்டப்படுத்த முடியும் என்று சொன்னல், சமுதாயத்தில் இன்று காணும் தீமைகளான வறுமை, அறியாமை, நோய் ஆகிய இவற்றின்மீது போர்தொடுக்க ஏன் ஒரு பொருளாதாரத் திட்டத்தை வகுக்க முடியாது? சர்வாதிகார நாடுகளைப் போல, ஜனநாயக நாடுகளில் தனி மனிதனின் உரிமையில் எளிதில் கைவைத்துவிட முடியாது. சர்வாதி கார நாடுகளில் ஜனங்கள் அரசாங்கத்துக்குச் சொந்தம். அரசாங்கம் ஆட்டிய வழியில் ஆடவேண்டியவர்கள் அவர்கள். ஜனநாயக நாடுகளிலோ வென்றல் ஜனங்களுக்கு அரசாங்கம் சொந்தம். அவர்கள் செலுத்திய வழியில் செல்ல வேண்டிய ஸ்தாபனம் அது. ஜனநாயக அரசாங்கம் தனிப்பட்ட மனிதர்களின் உரிமையில் தலையிடுகிறது என்றல், அதற்குத் தகுந்த காரணங்கள் இருக்க வேண்டும். திட்டம் வகுப்பதற்கு ஜனநாயகம் கட்டாயம் இடம் கொடுக்கும். கட்டுப்பாடுகளை ஜனங்கள்மீது வலிந்து புகுத்தாமல் அவர்களாகவே ஏற்றுக்கொள்வது ரொம்பப் பயன்தரத் தக்கது என்று திட்டத்தின் ஆசிரியர்கள் கூறுகிறார்கள்.

திட்டத்தைப் பற்றிப்பேசும்போது முதலாளித்துவத்திற்கும், சமதர்மத் திற்கும் உள்ள வித்தியாசத்தை ரொம்பப் பெரிதுபண்ணிக் காட்டிவிடு கிறார்கள். பொருளாதார முறையைத் தானகவே இயங்க விட்டுவிடவேண்டு மென்ற சித்தாந்தம் சென்ற நூறு வருஷங்களில் அதன் செல்வாக்கை இழந்துவிட்டது. விரும்பினலும், விரும்பாவிட்டாலும், இப்போது பொரு ளாதார வாழ்க்கையில் அரசாங்கம் தலையிடவே செய்கிறது. அதேபோன்று பழைய சமதர்மக் கொள்கைகளை அப்படியே பின்பற்றுவதாகக் கிளம்பிய நாடுகள் முதலாளித்துவக் கொள்கைகள் பலவற்றை ஏற்றுக் கொள்ளும் படி ஆயிற்று. இரு தரப்பிலும் ஏற்பட்டுவரும் இந்த அபிவிருத்திகளின் காரணமாக முதலாளித்துவத்திற்கும் சமதர்மத்துக்கும் உள்ள வித்தியாசம் ரொம்பக் குறைந்து வருகிறது. இரண்டும் ஒன்றையொன்று நாடிச் செல்லு கிறபடியால் இரண்டுக்கும் இடையிலுள்ள வேற்றுமை குறுகி, இரண்டுக்கும் பொதுவான ஒரு பொருளாதார அமைப்புமுறை உருவாகி வருகிறது. இந்த அமைப்பு முறைதான் பொதுமக்களுக்குப் பயன்தரத்தக்க முறை யில் செயலாற்ற முடியும். இந்தப் புதிய அமைப்பு முறையின் மூலாதாரக்

கொள்கைகள் வருமாறு: (1) தனிப்பட்ட மனிதர்கள் (அதாவது முதலாளிகள்) தொழிலில் ஈடுபடப் பூரண உரிமை இருக்கவேண்டும்; தொழிலில் ஈடுபடுவதற்கு அவர்கள் காட்டும் உற்சாகத்திற்கும் முயற்சிக்கும் ஒரு ஊனமும் விளைவிக்கக் கூடாது; (2) தனிப்பட்ட மனிதர்கள் தங்களுக்கு அளித்திருக்கும் இந்த உரிமையைத் துஷ்பிரயோகம் செய்யாமலிருக்கும் வண்ணம் அரசாங்கம் பொதுமக்களின் நலன்களைப் பாதுகாக்கவேண்டும்; (3) நாட்டின் பொருளாதாரக் கொள்கையை அமைப்பதிலும், பொருளாதாரத்தை அபிவிருத்தி செய்வதிலும் அரசாங்கத்துக்கும் பங்கு இருக்க வேண்டும். இந்த மூன்று கொள்கைகளும்தான் முதலாளித்துவ—சமதர்ம சித்தாந்தத்திற்கு அடிப்படை. இதுதான் நமது முதலாளிகளின் சித்தாந்தம். சுதந்திரத்திற்கு ஊனம் உண்டாக்காமல் திட்டம் நடைபெறவேண்டும். "திட்டம் வகுக்கவும் வேண்டும், தனிப்பட்ட முதலாளிகள் தாங்கள் விரும்பிய வண்ணம் தொழிலை நடத்துவதற்குரிய உரிமையும் இருக்கவேண்டும்; இது ரொம்ப உயர்ந்த ரகமான பொருளாதார முறை," என்று லண்டன் "எகானமிஸ்ட்" பத்திரிகை கூறுகிறது, அதை நமது முதலாளிகள் அக்ஷரம் அக்ஷரமாக ஏற்றுக்கொள்ளுகிறார்கள்.

லாபத்தை உத்தேசித்துத் தொழிலில் இறங்குவது முதலாளித்துவத்தின் முக்கியமான அம்சம். லாப வெறியினால் தூண்டப்பட்ட முதலாளி வர்க்கத்தார் கண்மூடித்தனமாகத் தொழிலில் ஈடுபடுகிற இந்தச் செயல்தான் இன்று மக்களை வறுமைக்கும் நோய்க்கும் இன்னும் ஆயிரக்கணக்கான இன்னல்களுக்கும் ஆளாக்கி வருகிறது. லாப நோக்கத்தையும் சொந்தச் சொத்துரிமையையும் நீக்கிவிட்டு, பொது நன்மையையும், பொதுச் சொத்துரிமையையும் புகுத்துகிற ஒரு அமைப்பைச் சமதர்மம் என்று சொல்லுகிறோம். பழையரகமான சமதர்மமாயிருந்தாலும் சரி, நமது முதலாளிகள் கூறுகிற புதுரகமான சமதர்மமாயிருந்தாலும் சரி, அதன் அடிப்படையான கொள்கை இதுவாகத்தான் இருக்கமுடியும். அப்படியிருக்கும்போது முதலாளித்துவம் சமதர்மத்தையும், சமதர்மம் முதலாளித்துவத்தையும் நாடிச்செல்வது எப்படி என்று நமக்குப் புரியவில்லை. இவையிரண்டுக்குமுள்ள வித்தியாசம் குறைந்தோ, மறைந்தோ போவது எப்படிச் சாத்தியம் என்பதும் விளங்கவில்லை. முதலாளித்துவம் சமதர்மத்தை நாடிச்செல்லக்கூடும் என்றால், பொதுநன்மையையும் பொதுச் சொத்துரிமையையும் அது ஒப்புக்கொள்ளவேண்டும்; அப்போது அது முதலாளித்துவமாக இராமல் சமதர்மமாகவே மாறிவிடும். சமதர்மம் முதலாளித்துவத்தை நாடிச்செல்வதென்றால், லாபநோக்கத்தையும் சொந்தச் சொத்துரிமையையும் அது ஒப்புக்கொள்ளவேண்டும்; அப்போது அது சமதர்மமாக இராமல் முதலாளித்துவமாக உருமாறிவிடும். லண்டன் 'எகானமிஸ்ட' பத்திரிகையின் வார்த்தைச் சாதுரியத்தினால் இரண்டையும் சந்திக்கும்படி செய்யலாமேயன்றி, வேறு விதத்தில் இந்த அற்புதத்தைச்செய்து காட்டவழியில்லை. ஆயினும் இவையிரண்டும் ஏற்கெனவே சந்தித்துவிட்டன. எங்கே? ஏன், நமது தொழிற்சாலை முதலாளிகளின் கற்பனைசக்தியிலும் அவர்கள் வகுத்ததிட்டத்திலும் தான்.

முதலாளித்துவத்தை உடும்புப்பிடியாகப் பிடித்துக்கொண்டிருந்த நாடுகள் பொருளாதார நெருக்கடியையும் போரையும் சமாளிக்க முடியாமல் விழிபிதுங்கி, முதலாளித்துவத்தின் பல அம்சங்களைவிட்டுக் கொடுத்தது வாஸ்தவம் தான். ஆனால் சமதர்மத்தைக் கடைப்பிடித்த எந்த நாடு தானாகவே முதலாளித்துவத்தை நாடிச்செல்லுகிறது என்று நாம் கேட்கிறோம். இன்று சமதர்மத்திற்குப் பெரிய எடுத்துக் காட்டாயுள்ளது சோவியத் ரஷ்யா. சோவியத் ரஷ்யா எந்த அம்சத்தில் சமதர்மத்தை விட்டுக் கொடுத்தது, எந்த அம்சத்தில் முதலாளித்துவத்தை ஏற்றுக் கொண்டது என்பது தெரியவில்லை. வருமானத்தில் தாரதம்மியங்களை ஏற்றுக்கொண்டது, அதற்கு ஸ்டகானவ் இயக்கம் உதாரணம் என்று

இந்தத்திட்டத்தின் ஆசிரியர்கள் கூறுகிறார்கள். உண்மையை எவ்வளவு திரித்துக் கூறுகிற காரியம் இது என்பதை ஏற்கெனவே எடுத்துக்காட்டியிருக்கிறோம்.

**யாருடைய சுதந்திரம்**

திட்டம் மக்களின் சுதந்திரத்தில் அதிகமாகத் தலையிடக்கூடாது என்று வருந்துகிறார்கள் நமது முதலாளிமார்கள். ஆனால் யாருடைய சுதந்திரத்தில் அது தலையிடுகிறது என்பதை அவர்கள் கூறவில்லை. உடுக்க உடையின்றி, உண்ண உணவின்றி, இருக்க இடமின்றித் தவிக்கும் மக்களின் சுதந்திரத்திலா அது தலையிடுகிறது? தொழிலைப் பெருக்கி, உற்பத்தி செய்த பொருளை நியாயமாக விநியோகித்து, பொதுமக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதனால்தான் பொதுமக்களின் சுதந்திரத்திற்குக் கேடு ஏற்பட்டுவிடுமா? வேலையில்லாமல்வாடும் தொழிலாளர்களுக்கு வேலையும் போதிய அளவு சம்பளமும் கொடுப்பது அவர்களுடைய சுதந்திரத்திற்கு இடையூறாகவா இருக்கும்? இல்லை, ஜமீன்தார்களின் கொடுமைக்கும் ஏகாதிபத்தியத்தின் சுரண்டலுக்கும் ஆட்பட்டுச்சாவதா இருப்பதா என்றிருக்கும் நமது விவசாயிகளும் விவசாயத்தொழிலாளர்களும் பெரிய பெரிய கூட்டுப்பண்ணைகளின் சொந்தக்காரர்களாக இருக்கும் வண்ணம் விஞ்ஞான முறையில் விவசாயத்தைப் புனர்நிர்மாணம் செய்வது அவர்களுடைய சுதந்திரத்தில் தலையிட்டுவிடுமா? பொதுமக்களின் நன்மையைக் கோருகிற திட்டம் யாருடைய சுதந்திரத்திலாவது தலையிடும் என்று சொன்னால், அது பொதுமக்களுக்கு விரோதமாகத் தங்கள் மனம் போனவாறு தொழிலில் ஈடுபட்டு லாபம் சம்பாதிப்பதிலேயே கண்ணும் கருத்துமாயிருக்கும் முதலாளிகளின் சுதந்திரமாகத்தான் இருக்கமுடியும். இந்திய மக்களுக்காக வகுக்கும் திட்டம் இந்தச் சுதந்திரத்தில் அதிகமாகத் தலையிடக்கூடாது என்று சொல்வதற்குத் தான் இந்தத்திட்டத்தின் ஆசிரியர்கள் இப்படிச் சுற்றிச் சுற்றி வருகிறார்கள். இது காரணமாகவே, லண்டன் 'எகானமிஸ்ட்' பத்திரிகையின் உதவி கொண்டு, தனிப்பட்ட முதலாளிகளின் சுதந்திரத்தில் தலையிடாத ஒரு புதிய ரகமான சமதர்ம சித்தாந்தத்தைச் சிருஷ்டித்திருக்கிறார்கள். இந்த முதலாளித்துவ - சமதர்மக் கிச்சடி சமதர்மப் போர்வை போர்த்த முதலாளித்துவமேயன்றி வேறல்ல.

இவர்கள் ஜனநாயகக்கொள்கைகளைக் சிலாகித்துப் பேசுவதும் இது காரணமாகவே. வேலை கிடைக்காமல் பசியாலும் நோயாலும் வாடி மடிவதற்குள்ள சுதந்திரத்தை யளிக்கும் ஜனநாயகம் உண்மையான ஜனநாயகமாகாது. ஒரு சிலர் தங்கள் சொந்த நலனையொட்டிப் பொதுநலத்திற்கு விரோதமாயிருந்தால், பிறரைச் சுரண்டிப் பிழைக்கும் அவர்களுடைய சுதந்திரத்தில தலையிடுவதுதான் உண்மையான ஜனநாயகத்தின் வேலை. அதைத்தான் பொதுமக்களுக்காக வகுக்கும் எந்தத் திட்டமும் செய்யும். அப்படி அது செய்யாவிட்டால், அது பொதுமக்களின் திட்டமாக இராது, முதலாளிகளின் திட்டமாகத்தான் இருக்கும்.

## 4. மூலத்தொழில்கள் முதலாளிகளுக்கா

இனி, பொருளாதாரத் துறையில் அரசாங்கம் எடுத்துக் கொள்ள வேண்டிய பங்கைப்பற்றி இந்தத்திட்டத்தின் ஆசிரியர்கள் விவரித்திருக்கிறார்கள். தொழில்களை அரசாங்கத்துக்கே சொந்தமாக்கி விடுவது, அவைகளை அரசாங்கத்தின் நிர்வாகத்துக்குமட்டும் விடுவது, அரசாங்கத்தின் கட்டுப்பாட்டுக்கு மட்டும் அவைகளை உட்படுத்துவது என்று மூன்று ரகம் இருக்கின்றன. இவற்றில் தொழில்களை அரசாங்கத்தின் கட்டுப்பாட்டுக்குமட்டும் உட்படுத்துவதுதான் சாலச்சிறந்தது. ஏனெனில் பெரும்

பாலான தொழில்களை அரசாங்கத்துக்குச் சொந்தமாக்கவேண்டிய அவசியமோ, அரசாங்கத்தின் நிர்வாகத்துக்கு உட்படுத்தவேண்டிய அவசியமோ ஏற்படவில்லை. அரசாங்கமே பணம்போடும் தொழில்கள் அரசாங்கத்துக்குச் சொந்தமாக இருக்கலாம். ஆயினும் கொஞ்சகாலத்திற்குப் பிறகு, சொந்த முதலாளிகள், பணம் போடமுடிந்தால், அவைகளை அரசாங்கத்தினிடமிருந்து விலைக்கு வாங்கித் தங்களுக்குச் சொந்தமாக்கிக் கொள்ளலாம். ஆனால் அரசாங்கம் அந்தத் தொழில்களைக் கட்டுப்படுத்துகிற உரிமையைமட்டும் வைத்துக்கொள்ளலாம். போர்ச்சாமான்களை உற்பத்திசெய்யும் தொழில்களையும், தபால் தந்திபோன்ற ஸ்தாபனங்களையும் அரசாங்கம் சொந்தமாக வைத்துக்கொள்ளலாம். தனக்குச் சொந்தமாயிருக்கும் தொழில்களை அரசாங்கமே நிர்வாகம் செய்துகொள்ளலாம். அரசாங்கத்துக்குச் சொந்தமாயிருக்கும் தொழில்களை தனிப்பட்ட முதலாளிகளையே நிர்வாகம் செய்துகொள்ளும்படியும் விட்டுவிடலாம். தொழில் தனிப்பட்ட முதலாளிகள் கையிலிருந்தால் தான் திறம்பட நடைபெறும். அது அரசாங்கத்தின் கையிலிருந்தால்தான் பொதுஜனங்களின் நன்மைக்காக நடைபெறும். தொழில்கள் எல்லாம் அரசாங்கத்துக்குச் சொந்தமாக இருக்கக்கூடாது, அவை முதலாளிகளுக்கே சொந்தமாகவும் இருக்கக்கூடாது; ஆகையால் இந்த இரண்டு வழிகளுக்கும் நடுத்தரமான வழியையே பின்பற்றவேண்டும். இந்தப் புதியவழிப்படி, பொதுஜன நன்மைக்கான போக்குவரத்து சாதனங்கள் அரசாங்கத்துக்குச் சொந்தமாகவேண்டும். முக்கியமான அரசாங்கத்தேவைகளைப் பூர்த்திசெய்யும் தொழில்களும் அதற்கே சொந்தமாயிருக்கலாம். இங்கும், ஒரே தொழிலைப் பாதி அரசாங்கத்துக்கும், பாதி தனிப்பட்ட முதலாளிகளுக்கும் சொந்தமாக்கிவிடுவது சாலச்சிறந்ததாகும்.

இதுதான் இந்தத்திட்டத்தின் ஆசிரியர்கள் கூறும் ஆலோசனை. இதன் சாராம்சம் என்ன? போர்க்கருவிகளைச் செய்யும் தொழில்கள், தபால், தந்திபோன்ற பொது உபயோகத்துக்கான சாதனங்கள் ஆகிய இவைகளைத் தவிர்த்த முக்கியமான மூலத்தொழில்களெல்லாம் இப்போதிருப்பதுபோல தனிப்பட்ட முதலாளிகளுக்கே சொந்தமாயிருக்கவேண்டும். அரசாங்கம் மூலதனம் போட்டு ஆரம்பிக்கும் தொழில்களை முதலாளிமார்கள் வாங்கத்தயாராயிருந்தால் அவற்றை அவர்களிடமே விட்டுவிடவேண்டும். அரசாங்கத்துக்குச் சொந்தமாயிருக்கும் தொழில்களை அரசாங்கமே நிர்வாகம் செய்துகொள்ளலாம். ஆயினும் தனிப்பட்ட முதலாளிகளைப் போல அரசாங்கம் தொழில்களைத் திறம்பட நடத்தமுடியாதாகையால் அரசாங்கத்துக்குச் சொந்தமாக இருக்கும் தொழில்களையும் தனிப்பட்ட முதலாளிகளின் நிர்வாகத்துக்கே விட்டுவிடவேண்டும். பொது நன்மைக்குத் தீங்கு பயக்கும் என்று தெரியும்போது தான் அரசாங்கத்துக்குச் சொந்தமான தொழில்களை அரசாங்கமே நிர்வகிக்கவேண்டுமா என்கிற பிரசினை எழலாம். போக்குவரத்து சாதனங்கள், ஏகபோக உரிமையை அநுபவிப்பதற்கு ஏதுவான தொழில்கள் பொது நன்மையை உத்தேசித்து அரசாங்கத்துக்கே சொந்தமாக இருக்கவேண்டுமென்றாலும், அவைகளையும் பாதி அரசாங்கத்துக்கும், பாதி தனிப்பட்ட முதலாளிகளுக்கும் சொந்தமாக்கிவிட்டால் ரொம்ப நன்றாயிருக்கும்.

எவ்வளவு அருமையான ஆலோசனை, பார்த்தீர்களா? மூலத்தொழில்கள் முதலாளிகளுக்குச் சொந்தமாயிருப்பதால் லாபநோக்கத்துக்கு இடம் கொடுத்து விடுகிறது, அதனால் பொதுமக்கள் வறுமைக்குட்பட்டுத் தவிக்கிறார்கள், அவர்களைக் கைதூக்கிவிட ஒரு திட்டம் வேண்டும் என்றால், அதற்கு இவ்வளவு விபரீதமான ஆலோசனையா? லண்டன் "எகானமிஸ்ட்" பத்திரிகையோடும், கெய்ன்ஸ் பிரபுவோடும் கூட்டுச்சேர்ந்து ஒரு புதிய யுகத்தை, ஒரு புதிய ரசமான சமதர்மத்தைச் சிருஷ்டிப்பதாகக் கிளம்பிய

நமது தொழிற்சாலே முதலாளிகள், தனிப்பட்ட முதலாளிகளுக்குச் சொந்தமாயிருக்கிற தொழில்களே அரசாங்கத்துக்குச் சொந்தமாக்குகிற விஷயத்தை விட்டுவிட்டு, அரசாங்கத்துக்குச் சொந்தமாயிருக்கும், சொந்தமாகப் போகும் தொழில்களேயும் முதலாளிகளுக்குச் சொந்தமாக்குவதைப்பற்றிய ஆலோசனேயைக் கூறுகிருர்கள். அரசாங்கமே மூலதனம் போட்டு நடத்தும் தொழில்களேயும் முதலாளிமார்களின் நிர்வாகத்துக்கு விட்டுவிடும்படியும் சிபார்சு செய்கிருர்கள்; அதாவது மூலதனம் போடாமலேயே முதலாளிமார்கள் பொதுமக்களேச் சுரண்டுவதற்குள்ள ஆலோசனேயைக் கூறுகிருர்கள். பொதுமக்களுக்குப் பூரண பொறுப்புள்ளதான அரசாங்கம் இந்த அருமையான ஆலோசனேயை ஏற்று நல்லதனமாக நடந்துகொள்ள வேண்டும்; பொதுமக்களின் நன்மைக்கு அத்யாவசியமான மூலத்தொழில்களே முதலாளிகளுக்கே சொந்தமாயிருக்க விட்டுவிடவேண்டும். இப்படியெல்லாம் செய்யாவிட்டால் அது ஜனநாயக அரசாங்கமாயிராமல், சர்வாதிகார அரசாங்கமாக மாறிவிடும் என்பது இந்தத் திட்டத்தின் ஆசிரியர்களின் நோக்கம். இதிலிருந்து அவர்கள் அடிக்கடி சொல்லிவரும் "ஜனநாயகம்" என்ற வார்த்தையின்மூலம் பொதுமக்களேச் சுரண்டுவதற்கு முதலாளிகளுக்குள்ள பூரண சுதந்திரத்தையே குறிப்பிடுகிருர்கள் என்பது வெளிப்படையாகத் தெரிகிறதல்லவா?

நாட்டின் பாதுகாப்புக்கான தொழில்கள், மூலத்தொழில்கள், பொது வசதிகள் சம்பந்தப்பட்ட தொழில்கள், இதர முக்கியமான தொழில்கள், யாவும் அரசாங்கத்துக்குச் சொந்தமாயிருப்பதோடு, அரசாங்கத்தின் நிர்வாகத்திலேயே இருக்கவேண்டும், அப்படியிராவிட்டால் பொதுமக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துகிற முறையில் இந்தத் திட்டத்தை நிறைவேற்றமுடியாது என்பதை இந்தத்திட்டத்தின் முதற்பாகத்தைப் பற்றி எழுதும்போதே கூறினேம். இந்த முக்கியமான பிரசினேயைப் பிறகு பார்த்துக்கொள்ளலாம் என்று இந்தத் திட்டத்தின் ஆசிரியர்கள் தள்ளிப் போட்டதிலிருந்தே இவர்களுடைய உண்மையான நோக்கத்தைப்பற்றி நாம் சந்தேகப்பட்டோம். அந்தச் சந்தேகம் இப்போது முற்றிலும் உண்மையாகிவிட்டது. மூலத்தொழில்களேயும் இதர முக்கியமான தொழில்களேயும் தனிப்பட்ட முதலாளிகளுக்குச் சொந்தமாக்கிவிடாமல் எப்படி அரசாங்கத்துக்குச் சொந்தமாக்கவேண்டும் என்பதைப்பற்றிக் கவலேப்படுவதற்குப் பதிலாக, அரசாங்கத்துக்குச் சொந்தமாயிருக்கும், சொந்தமாகப் போகும், தொழில்களே யெல்லாம் தனிப்பட்ட முதலாளிகளுக்கு எப்படிச் சொந்தமாக்குவது என்ற கவலே இவர்களுக்கு அதிகமாக ஏற்பட்டிருக்கிறது. ஜனநாயகக் கொள்கைக்கு இவ்வளவு விரோதமான, இவ்வளவு பிற்போக்கான ஆலோசனேயை தொழிற்சாலே முதலாளிகளேத் தவிர வேறு யாரால் கூறமுடியும்?

### திறமை எதில்?

தனிப்பட்ட முதலாளிகள்தான் தொழிலேத் திறமையாக நடத்தமுடியும், பொதுஜனங்களின் அரசாங்கம் திறமையாக நடத்த முடியாது என்ற எண்ணம் நமது முதலாளிகளின் மனசில் எப்படியோ வேரூன்றிப்போயிருக்கிறது. இவர்கள் ஏன் இப்படி நினேக்கிருர்கள் என்பது நமக்குச் சரியாகப் புரியவில்லே. சோவியத் ரஷ்யாவில் பிரமாண்டமான தொழிற்சாலேகள் இருக்கின்றன. அங்கே எல்லாத் தொழில்களும் அரசாங்கத்துக்கே சொந்தம், தனிப்பட்ட முதலாளிகளுக்குச் சொந்தமில்லே. ஆயினும் அங்கே தொழில் திறமைக் குறைவாக நடக்கிறது என்று சொல்ல முடியுமா? குறித்த காலத்தில் குறித்த செலவில் அநாயாசமாக ஒன்றுக்குப் பத்தாக உற்பத்தியைப் பெருக்கும் ஸ்டகானவ் இயக்கம் தோன்றியது சோவியத் ரஷ்யாவிலேயே அல்லவா? அபாரமான ஆற்றல் வாய்ந்த நாஜிப் படைகளேத் தோற்கடித்ததற்குள்ள முக்கியமான காரணங்களில் சோவியத் ரஷ்யாவில்

காணும் தொழில்த் திறமையும் ஒன்று என்பதை யாரும் மறுக்க முடியுமா? தொழில்கள் தனித்த முதலாளிகளுக்குச் சொந்தமா யிருக்கும் பிரான்சும் இதர நாடுகளும் ஹிட்லரின் படைகளுக்குமுன் நிற்கமாட்டாமல் ஓடியது அங்கே தொழில்த் திறமைக் குறைவாக நடந்தது என்ற காரணத்தினல் என்பதையும் ஒப்புக்கொள்ளாமலிருக்க முடியுமா?

மேலும், தொழிலாளர்களுக்கு நல்ல புஷ்டியான உணவும், சௌகரிய மான உடை முதலியனவும் கிடைத்தால்தான் அவர்கள் திறமையாக வேலை பார்க்க முடியும், அதற்கு அவர்களுக்குப் போதிய சம்பளம் கிடைக்க வேண்டுமென்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். ஆயினும் தொழிலா ளர்களின் சம்பளத்தை குறைப்பதற்கு ஏதாவது சந்தர்ப்பம் வாய்க்காதா வென்று ஆவலோடு பார்த்துக் கொண்டிருக்கிற முதலாளிகள் தொழிலைத் திறமையாகவா நடத்த முடியும்? அவர்கள் காட்டுகிற திறமையெல்லாம் தொழிலாளர்களையும் பொதுஜனங்களையும் ஒருங்கே சுரண்டுவதிலேதான் இருக்கும். முதலாளிகளுக்கு லாபத்திலே கண். அந்த லாபத்தை அதிகப் படுத்துவதில் அவர்கள் திறமை காட்டத்தான் செய்கிறார்கள். அவர்கள் காட்டுகிற இந்தத் திறமை நாட்டிற்கு எவ்வளவு பெரிய தீங்கை இழைத்து வருகிறது என்று சொல்லி முடியாது. ஆயினும் இந்தத் திறமையை அவர் கள் தொடர்ந்து காட்டிக்கொண்டிருக்கவேண்டு மென்பதற்காக அரசாங்கத் துக்குச் சொந்தமான தொழில்களையும் அவர்களது நிர்வாகத்துக்கு விட்டு விடவேண்டுமென்று சொல்லுகிற ஆலோசனை முதலாளிகளின் நன்மைக் காகச் சொல்லுகிற ஆலோசனையா பொதுமக்களின் நன்மைக்காகச் சொல்லுகிற ஆலோசனையா என்பதை வாசகர்களே அறிந்துகொள்ளலாம்.

### கட்டுப்பாடுமட்டும் போதாது

மூலத் தொழில்கள் யாவும் அரசாங்கத்துக்குச் சொந்தமா யிராவிட்டா லும், அரசாங்கத்தின் கட்டுப்பாட்டின்கீழ் இருக்க வேண்டு மென்றுதான் சொல்லுகிறார்களே, அது போதாதா என்று கேட்கலாம். ஆனல் அரசாங் கத்தின் கட்டுப்பாட்டுக்குக் கீழ் இருக்கவேண்டுமென்று சொல்லி முடிப்ப தற்கு முன்னர், தொழிலுக்குச் சொந்தக்காரர்களா யிருந்து அதை நிர் வகிப்பவர்களின் உற்சாகத்தைக் குறைத்துவிடக்கூடிய முறையில் அரசாங் கக் கட்டுப்பாடு இருக்கக்கூடாது என்று அவர்கள் முந்திக் கொள்ளுகிறார் கள். விலையைக் கட்டுப்படுத்துவது, கம்பெனிகள் கொடுக்கும் லாப விகி தங்களைக் கட்டுப்படுத்துவது, தொழிலாளர்கள் வேலை பார்க்கும் நேரம் சம் பளம் போன்ற அம்சங்களைத் திட்டப்படுத்துவது, நிர்வாக போர்டில், அர சாங்க டைரக்டர்களை நியமிப்பது, கணக்குகளைச் சரியானபடி பரீட்சிப்பது ஆகிய இவைபோன்ற கட்டுப்பாடுகளையே இந்தத் திட்ட ஆசிரியர்கள் குறிப் பிடுகிறார்கள். மேலே சொன்ன கட்டுப்பாடுகள் பல இன்று நடைமுறை யில் இருந்துவருவது நமக்குத் தெரியும். ஆயினும் இந்தக் கட்டுப்பாடுகளி ஞல் பொதுமக்களுக்குக் குறிப்பிடத் தக்க நன்மைகள் ஏதாவது ஏற்பட் டிருக்கின்றனவா? இன்றும் துணி கிடைக்கத்தான் மாட்டேன் என்கிறது, வாழ்க்கைக்கு அத்யாவசியமாகத் தேவைப்படுகிற சாமான்கள் கைக்கு எட்டவில்லை. ஆனல் கள்ள மார்க்கட்டில் எவ்வளவு சாமான்கள் வேண்டு மானலும் எந்தச் சாமான் வேண்டுமானலும் வாங்கலாம். இந்தக் கட்டுப் பாடுகளை முதலாளி வர்க்கத்தார் அநாயாசமாக மீறுகிறார்கள். ரொம்ப அத்யாவசியமாகத் தேவைப்படுகிற நிலக்கரியை அதிகமாக உற்பத்தி செய்யாமலிருப்பதற்கு வேண்டிய சூழ்ச்சிகளை யெல்லாம் செய்கிறார்கள். அப்படி அருமையாகக் கிடைக்கும் நிலக்கரியைத் திரும்பவும் பூமிக்குள் புதைத்துவிட்டு உற்பத்தியைக் குறைக்க முயலுகிறார்கள்.

இதெல்லாம் அந்நிய அரசாங்கமாக இருப்பதால் சாத்தியமாகிறது, பொதுஜனங்களுக்குப் பொறுப்பாயுள்ள அரசாங்கம் ஏற்பட்டால் சாத்தி

யப்படாது என்று சொல்லலாம். ஆயினும் இதைச் செய்கிறவர்கள் யார்? நமது சொந்த நாட்டைச் சேர்ந்த முதலாளிகளே அல்லவா? பொதுஜனங்களின் ரத்தத்தில் இன்று வியாபாரம் செய்யும் இவர்கள் நாளைக்கு நல்ல பிள்ளைகளாக நடந்துகொள்வார்கள் என்பதற்கு என்ன அத்தாட்சி? தங்கள் தீய சூழ்ச்சிகளுக்கு இசையும்படி அரசாங்கத்தை இன்று கைக்குள் போட்டவர்கள், நாளை பொதுஜனங்களின் அரசாங்கத்தையும் பல துறைகளில் விலைக்கு வாங்கப் பார்ப்பார்கள். அதற்கு அந்த அரசாங்கம் இசையாவிட்டால், அதைக் கவிழ்க்கவும் முயற்சிப்பார்கள். நாட்டின் உயிர்நாடியான மூலத் தொழில்களையெல்லாம் தங்கள் சொந்தச் சொத்தாக்கி வைத்திருக்கும் முதலாளிகளுக்கு இது அவ்வளவு அசாத்தியமான காரியமாகப் போய்விடாது. ஆகையால் மூலத் தொழில்களும் இதர முக்கியமான தொழில்களும் அரசாங்கத்துக்குச் சொந்தமாயிருந்து அவற்றின் நிர்வாகத்திலேயே இருந்தால்தான், அரசாங்கம் பெயரளவில் மட்டுமன்றிக் காரியாம்சையிலும் பொதுஜனங்களுக்குப் பூரண பொறுப்புள்ள அரசாங்கமாக இருப்பது சாத்தியமாகும் அப்படியின்றி, அரசாங்கக் கட்டுப்பாடு மட்டும் இருந்தால் போதும் என்பது முதலாளி வர்க்கத்தாரின் சுயநலத்துக்கும் சூழ்ச்சிக்கும் இடம் கொடுப்பதாகுமேயன்றி, பொதுஜனங்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த வழிகோலியதாகாது.

உற்பத்தி, விநியோகம், அழிவு, உள்நாட்டு வியாபாரம், வெளிநாட்டு வியாபாரம், தொழிலாளர்களின் சம்பளம், வேலை நேரம் போன்றவைகளைக் கட்டுப்படுத்துவதனல் ஒருபயனும் ஏற்படாது என்பது நமது அபிப்பிராயம் அன்று. இந்தத் திட்டத்தின் ஆசிரியர்கள் கூறுவதுபோல, முதலாளித்துவத்தின் முக்கிய அம்சங்களை அப்படியே வைத்துக்கொண்டு, கட்டுப்பாடுகளை மட்டும் அரசாங்கம் கையாளுவதனல் எதிர்பார்த்த பலன் ஏற்படாது; சில சந்தர்ப்பங்களில் கட்டுப்பாடுகளைக் கிரியாம்சைக்குக் கொண்டு வருவதே கஷ்டமாகவும் போய்விடும்; இந்த நிலையில் இந்தத் திட்டம் பொதுஜனங்களுக்கு வெற்றியாக ஒரு நாளும் நடைபெற முடியாது என்பதையே நாம் குறிப்பிட விரும்புகிறோம்.

## 5. முதலாளிகள் திட்டம் முதலாளிகள் திட்டமே

இந்திய மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தும்பொருட்டு போடுகிற திட்டம் வெற்றியடைவது விநியோகப் பிரசினையையும், மூலத் தொழில்கள் யாருக்குச் சொந்தமாயிருக்க வேண்டுமென்கிற பிரசினையையும் தீர்த்து வைக்கிற முறையைப் பொறுத்திருக்கிறது. உயிர்நாடியான இவை இரண்டு பிரசினைகளையும் தீர்த்துவைப்பதற்கு இந்தத் திட்டத்தின் ஆசிரியர்கள் கூறும் ஆலோசனைகள் பொதுமக்களுக்கு நன்மை பயக்கும் முறையில் இல்லாமல், முதலாளிகளுக்கும் நிலச்சுவான்தார்களுக்கும் நன்மை பயக்கிற முறையில் இருக்கின்றன. வருமானத்தில் இன்று காணும் அபாரமான தாரதம்மியங்களைப் போக்கி, தேச வருமானத்தை நியாயமாக எல்லோருக்கும் விநியோகிப்பதற்கு அவர்கள் கூறுகிற ஆலோசனைகள் வெளிக்குப் புரட்சிகரமாகத் தோன்றலாம். ஆனல் இப்போது அமுலிலிருக்கிற பொருளாதார அமைப்புக்கு எவ்வித ஊனமும் வராமல் அதை அப்படியே வைத்துப் பாதுகாக்கவேண்டும் என்னும் நோக்கத்தோடு முன்னெச்சரிக்கையாகச் சொன்ன ஆலோசனைகள் இவை என்பது நுணுகிப் பார்ப்போருக்கு எளிதில் புலனகும். உதாரணமாக, வருமானத்திற்குக் கடுமையான வரி விதிக்கவேண்டும் என்று சொல்லுகிறவர்கள் திரும்பவும் தொழிலில் போடுகிற வருமானத்துக்கு வாங்கிய வரியைத் திருப்பிக் கொடுத்துவிட வேண்டும் என்கிறார்கள். பெரும்பாலான தொழிற்சாலை முதலாளிகளை வரியினின்றும் தப்புவிப்பதற்குச் செய்யும் உபாயமே இது. இந்தத் திட்டத்தின் ஆசிரியர்கள் சொல்லுகிறபடி, முதலாளித்துவத்தின் ஆக்கத்தைப்

படிப்படியாகக் குறைப்பதற்குப் பதிலாக இது அதைப் படிப்படியாகவலுப் படுத்தவே உதவியாக இருக்கும். மேலும், முதலாளித்துவ அமைப்பை அடிப்படையில் மாற்ருமல், வருமானவரி, மரணவரி போன்ற வரிகளை விதிப்பதனுல் மட்டும் எதிர்பார்த்த பயனை அடைய முடியாது. அது முதலாளித்துவம் என்கிற விஷ விருட்சத்தின் அடித்தூரை வெட்டாமல், அதன் நுனிக் கொம்புகளை அவ்வப்போது வெட்டிக்கொண்டிருப்பதையே ஒக்கும். இன்று, இந்தியாவில் வருமான வரி இருக்கிறது. அமித லாப வரி இருக்கிறது, மரண வரி வரப்போகிறது; விலைக் கட்டுப்பாடுகள் இருக்கின்றன. இவற்ருல் வருமானத்திலுள்ள தாரதம்மியங்கள் குறைந்துவிடும் என்பது இந்தத் திட்டத்தைத் தயாரித்தவர்களின் நோக்கம். இந்தப் புரட்சிகரமான மாற்றங்கள் ஏற்கெனவே ஏற்பட்டுவிட்டன, இவற்றை ஏற்படுத்தியதும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் என்று சொன்னுல், இந்த வரிகளும் இந்தக் கட்டுப்பாடுகளும் முதலாளித்துவத்தின் ஆக்கத்தைக் குறைப்பது எவ்வளவு சாத்தியம் என்பதை நாம் ஒருவாறு தெரிந்துகொள்ளலாம்.

வாழ்க்கைத் தரத்தை உயர்த்தும்பொருட்டு பெரும்பான்மையான மக்களின் வருமானத்தை உயர்த்துவதற்கு அவர்கள் கூறும் ஆலோசனைகளும் உற்று நோக்குவோருக்கு உபயோகமற்றவை என்பது புலப்படும். எல்லோருக்கும் வேலை கிடைக்கும்படி செய்யவேண்டும். குறைந்தபட்சம் கொடுக்கும் சம்பளத்தை நிர்ணயித்துவிடவேண்டும், நகரங்களிலும் நாட்டுப் புறங்களிலும் சம்பளத்தை உயர்த்த முயற்சி எடுத்துக்கொள்ளவேண்டும் என்பன போன்ற ஆலோசனைகள் ஒன்றும் புதிதல்ல. முதலாளித்துவத்திற்குச் சார்பான பொருளாதார நிபுணர்கள் ரொம்பகாலமாகச் சொல்லி வந்த ஆலோசனைகள் தான். ஆனுல் இவற்றைக் காரியாம்சைக்குக் கொண்டுவருவது எப்படி? வேலையில்லாத் திண்டாட்டம், சம்பளக் குறைவு, வறுமை, பிணி போன்றவைகள் லாப நோக்கத்தையும் சொந்தச் சொத்துரிமையையும் அடிப்படையாகக் கொண்ட ஒரு பொருளாதார அமைப்பின் காரணமாக ஏற்பட்டவை. அந்தப் பொருளாதார அமைப்பைப் பொதுமக்களின் நன்மைக்கான முறையில் மாற்றி அமைக்காதவரையில் இந்தத் தீமைகளைக் களைந்துவிட முடியாது. ஆனுல் களைந்துவிடுவதாகச் சொல்லிக்கொண்டிருக்கலாம் அவ்வளவுதான்.

வருமானத்திலுள்ள தாரதம்மியத்தைக் குறைத்து பெரும்பான்மையான மக்களின் வருமானத்தையும் வாழ்க்கைத் தரத்தையும் உயர்த்துவதற்கு உதவியாக இன்றைய விவசாய அமைப்பை மாற்றுவதற்கு அவர்கள் கூறும் ஆலோசனைகளும் காரியத்துக்கு உதவாதவையே. ஏறக்குறைய நிலச்சுவான்தார் முறையின் கீழிருக்கிற 80 சதவிகித உழு நிலங்களைத் தனிப்பட்ட குடியானவர்களுக்கு மெள்ள மெள்ள மாற்றிவிடவேண்டும் என்கிருர்கள். அதற்கு முதற்படியாக, நிலச்சுவான்தாரின் கீழுள்ள குடியானவர்களிடம் வரி வசூலிக்கிற பொறுப்பை அரசாங்கம் ஏற்றுக்கொண்டு நிலச்சுவான்தாருக்கு வருஷா வருஷம் சேரவேண்டிய கிஸ்தியை அரசாங்கமே செலுத்திவிடவேண்டுமாம். இப்படி நிலச்சுவான்தார்களுக்கு கிஸ்தி செலுத்திவருகிற அரசாங்கம் கொஞ்ச காலத்தில் பணக்கார அரசாங்கமாக மாறி விடுமாம். அப்போது நிலத்தில் நிலச்சுவான்தாருக்குள்ள உரிமைக்காக நியாயமான ஒரு மொத்தத் தொகையை அரசாங்கம் அவருக்குச் செலுத்திவிடவேண்டுமாம். இப்படியாக நிலச்சுவான்தாருக்கும் குடியானவர்களுக்கும் உள்ள புனிதமான பாந்தவ்யத்தை அறுத்துவிடலாம் என்று யோசனை கூறுகிருர்கள். இதோடு நில வரியை எல்லாப் பகுதிக்கும் ஏறக்குறையச் சமமாக்கி, ஒரு குறிப்பிட்ட அளவுக்கு மேற்பட்ட நிலவருமானத்திற்கு வருமான வரி விதித்து, வரப்பை உயர்த்தி உரம்போடுகிற சீர் திருத்தங்களையும் செய்தால் விவசாயத்தையே புனர் நிர்மாணம் செய்துவிடலாம் என்று அவர்கள் சொல்லுகிருர்கள்.

விவசாயக் கடனைத் தீர்ப்பதற்கு இந்தத் திட்டத்தின் ஆசிரியர்கள் கூறிய ஆலோசனை ஞாபகமிருக்கலாம். குடியானவர்கள் யாரிடம் கடன் பட்டிருக்கிறார்களோ, அதே ஆசாமிகளிடமிருந்து புதிதாகக் கடன் வாங்கிப் பழைய கடனைத் தீர்த்துவிடலாம் என்று கூறினார்கள். விவசாயக் கடனை ஒழிப்பதற்காக ஏற்படுத்துகிற கூட்டுழைப்புச் சங்கங்களுக்குத் தேவைப் படுகிற பணம் இன்னொரு வர்க்கத்தாரின் சேமிப்பே யன்றி வேறல்ல, இந் தச் சேமிப்புக் கூட்டுழைப்புச் சங்கங்களுக்குக் கிடைத்துவிடும் என்று அவர் கள் சொல்லவில்லையா? சொந்தச் சொத்துரிமைக்கு வைத்திருக்கும் மதிப்பு அவர்களை இவ்வளவு பிற்போக்கான ஆலோசனையைக் கூறும்படி தூண்டி யது, சொந்தச் சொத்துரிமைக்கு அவர்கள் வைத்திருக்கும் அதே மதிப்பு தான் நிலச்சுவான்தார்கள் மீதும் இத்தனை பரிவு காட்டும்படி தூண்டுகிறது. பொதுஜனங்களுக்குப் பொறுப்புள்ள அரசாங்கம் நமது விவசாய வாழ்க் கையைச் சீர்குலைத்து நமது குடியானவர்களை இவ்வளவு கேவலமான நிலை மைக்குக் கொண்டுவந்திருக்கும் நிலச்சுவான்தார்களுக்கு நிலவரி வசூலித் துக் கொடுக்கும் ஆசாமியாக இருக்கவேண்டுமாம். அந்த அரசாங்கம் பண வலுப்பெற்ற பிறகு நிலத்திலுள்ள உரிமைக்காக நிலச்சுவான்தார் களுக்கு நியாயமான ஒரு மொத்தத் தொகையை அது செலுத்திவிட வேண்டு மாம். நிலச்சுவான்தார்களுக்குத் தாசானு தாசனாக இருந்து வரி செலுத்தி வரும் அரசாங்கம் பண வலுப் பெறுவது எப்போது? அது பொதுஜன அரசாங்கமாக இருப்பது எப்படி? நிலச்சுவான்தார் முறையில் கை வைக் காமல் அதை இப்படிப் போற்றிப் பாதுகாத்து வந்தால் விவசாயத்தில்தான் என்ன பெரிய மாறுதல்கள் ஏற்பட்டுவிட முடியும்? வறுமைப் பட்டுப் போன குடியானவர்களிடமிருந்து கிஸ்தி வசூலிப்பது நிலச்சுவான்தார்களுக் குக் கஷ்டமா யிருக்கிறது, ஆதலால் அரசாங்கமே அந்தக் கிஸ்தியைச் செலுத்தி விடட்டும் என்பதற்காகச் சொன்ன ஆலோசனை போலல்லவா இருக்கிறது இது. நிலச்சுவான்தார்களுக்கு எள்ளாய்க் கொடுக்காமல் எண்ணெயாகவே கொடுத்துவிடவேண்டுமென்ற இந்தப் புரட்சிகரமான மாற்றத்தைச் செய்வதற்காக ரூ. 1,240 கோடி பொதுஜனங்களின் பணத் தைச் செலவு செய்யவேண்டுமாம். இந்த ஆலோசனைகளினால் நமது விவ சாயத்தில் ஒரு இம்மியும் மாற்றம் ஏற்படப் போவதில்லை. பொதுஜனங் களுக்குச் சொந்தமான நிலத்தைப் பொதுஜன அரசாங்கமே எடுத்துக் கொண்டு விவசாயத்தைப் புனர் நிர்மாணம் செய்வதற்குக் குறுக்கே நிற்க நிலச்சுவான்தார்கள் யார்? அவர்களுக்கு ஏன் பொதுஜன அரசாங்கம் கிஸ்தி செலுத்தவேண்டும்? அவர்களுக்கு அந்த நிலத்திலுள்ள உரிமைக் காகவென்று மொத்தமாக ஒரு தொகையை ஏன் கொடுக்கவேண்டும்? அப்படியே அவர்களுக்கு ஒரு மொத்தத் தொகையைக் கட்டுவதாகவே வைத்துக்கொண்டாலும், அந்தத்தொகை முழுவதையும் சுமார் 50 வருஷ காலத்தில் கட்டுவதாக ஏற்பாடுசெய்து, வருஷா வருஷம் ஐம்பதில் ஒரு பகுதியை ரொக்கமாகவோ அல்லது கடன் பத்திரமாகவோ, ஏன் கொடுக் கக்கூடாது? நிலச்சுவான்தார்களுக்கும் குடியானவர்களுக்கும் உள்ள தொடர்பை அறுத்தெறிவதற்கு அரசாங்கம் பணக்கார அரசாங்கமாகிற வரையில் காத்துக்கொண்டிருக்கிற யோசனை அந்தத் தொடர்பை நிரந்தர மாக வைத்துக்கொள்வதற்குச் சொன்ன யோசனையே யல்லவா? இந்த யோசனைகளினால் நமது விவசாயத்திற்கும் நமது குடியானவர்களுக்கும் நன்மை ஏற்படப்போவதில்லை. இந்தத் திட்டத்தின் முற்பகுதியை ஆராயும் போது கூறியதையே நாம் திரும்பவும்கூற விரும்புகிறோம். "நிலச்சுவான் தார் முறையை ஒழித்து, துண்டுபட்ட நிலங்களை ஒன்று சேர்த்துப் பெரிய கூட்டுப்பண்ணை முறையைக்கையாண்டு, கூட்டுழைப்புப் பாங்கி வசதிகளை ஏற்படுத்தி, விஞ்ஞான முறையில் விவசாயத்தைப் புனர்நிர்மாணம் செய்தாலொழிய, நமது விவசாயத்தில் அபிவிருத்தி ஏற்படப்போவதில்லை, விவசாயத்தில் அபிவிருத்தி ஏற்படாதவரையில் தொழில் முறையில் இந்தியா சிறந்துவிடப்போவதும் இல்லை."

மூலத்தொழில்களை அரசாங்கத்துக்குச் சொந்தமாக்குகிற விஷயத்திலும் இந்தத் திட்டத்தின் ஆசிரியர்கள் ரொம்பப் பிற்போக்கான ஆலோசனைகளையே கூறியிருக்கிறார்கள். பெரும்பான்மையான மூலத்தொழில்கள் சொந்த முதலாளிகளின் கையிலிருக்கவேண்டும், அரசாங்கம் முதல் போட்டு ஆரம்பிக்கிற தொழில்களையும் சொந்த முதலாளிகளுக்கு விற்றுவிடலாம், அரசாங்கத்துக்குச் சொந்தமான தொழில்களை சொந்த முதலாளிகளின் நிர்வாகத்துக்கு விட்டுவிடலாம் என்று சொல்லுகிறார்கள். இவ்வளவும் அவர்கள் சிருஷ்டிக்கப்போகும் புதிய ரகமான சமதர்மத்தின் பேரால் என்று சொன்னால், அந்தச் சமதர்மம் நாஜிகளின் சமதர்மத்திற்கு ஒப்பாக இருக்குமென்று சொல்லிவிடலாமல்லவா? நிலச்சுவான்தாருக்குக் கிஸ்தி கட்டச்சொன்ன பொதுஜன அரசாங்கத்தை இப்போது தொழிற்சாலை முதலாளிகளுக்குத் தலைபணியச் சொல்லுகிறார்கள் பாம்பே திட்டத்தின் ஆசிரியர்கள். இந்தப் பொதுஜன அரசாங்கத்தை இன்னும் என்னென்ன காரியங்களைச் செய்யச் சொல்லுவார்களோ, அது கடவுளுக்கும் நமது தொழிற்சாலை முதலாளிகளுக்கும்தான் தெரியும். நிலச்சுவான்தாருக்குக் கிஸ்தி செலுத்தி, தனக்குச் சொந்தமாயிருக்கும் தொழில்களையும் முதலாளிகளுக்குச் சொந்தமாக்கி, அவர் நிர்வாகத்துக்கு உட்படுத்தும் அரசாங்கம் ஜனநாயக அரசாங்கமாக, பொதுஜனங்களுக்குப் பூரணமான பொறுப்புள்ள அரசாங்கமாக, இருக்கவேண்டுமாம். இவ்வளவு கேவலமான, நம்பிக்கைத் துரோகமான காரியங்களை செய்ய ஜனநாயக அரசாங்கம் வேறு வேண்டுமா? இதிலிருந்து ஜனநாயக அரசாங்கம் எது என்பதைப்பற்றி அவர்கள் கொண்டிருக்கும் அபிப்பிராயம் வெட்ட வெளிச்சமாகிறது.

சுருங்கச்சொன்னால், விநியோகப் பிரசினையையும், மூலத்தொழில்கள் யாருக்குச் சொந்தமாயிருக்க வேண்டுமென்கிற பிரசினையையும் தீர்த்து வைப்பதற்கு இந்தத் திட்டத்தில் கூறியிருக்கும் ஆலோசனைகள் ரொம்பப் பிற்போக்கானவை. இந்த ஆலோசனைகள் முதலாளித்துவத்தின் பிடியைத் தளர்த்துவதற்குப் பதிலாக, அதை வலுப்படுத்துகின்றன. இவைகளைப் பின்பற்றுவதனால் இப்போதுள்ள பொருளாதார முறையில் பொது மக்களுக்கு நன்மையளிக்கும் ஒரு மாற்றத்தைக் கூடச்செய்யமுடியாது. மூலத்தொழில்களும் இதர தொழில்களும் முதலாளிகளுக்கே சொந்தமாகி அவர்கள் கண் காணிப்பிலேயே இருக்குமாதலால், பொதுமக்களின் தேவையைப் பூர்த்திசெய்யும் வண்ணம் தொழிலைப் பெருக்கவும், வேலையில்லாத் திண்டாட்டத்தை ஒழிக்கவும் இப்போது குறுக்கே நிற்பவையெல்லாம் அப்போதும் குறுக்கே நிற்கும். அப்படியே தொழிற் பெருக்கம் ஏற்படுகிறது என்று வைத்துக்கொண்டாலும் அதனால் தொழிலாளர்களின் நிலை அபிவிருத்தியடையாது. பொதுமக்களின் வாழ்க்கைத்தரம் நிச்சயமாக உயரமாட்டாது. நமது விவசாயத்தின் சாபத்திட்டமாக இருக்கும் கடனுக்கும் நிலச்சுவான்தார் முறைக்கும் இந்த ஆலோசனைகள் புத்துயிர் அளிக்கின்றன. கடனும் ஒழிந்து நிலச்சுவான்தார் முறையும் ஒழிந்தால்தான் விவசாயம் உருப்படமுடியும் என்பது நமக்குத் தெரியும். ஆதலால் நமது தொழிலாளர்கள் நிலையும் இப்போதிருக்கிறபடியே இருக்கும். நமது நாட்டுக்கு முதுகெலும்புபோலுள்ள குடியானவர்களும் எப்போதும்போலக் கடனுக்கும் வறுமைக்கும் நோய்க்கும் இரையாகிக்கொண்டு வருவார்கள். உள்ளூரச் செல்லரித்துப் போயிருக்கும் விவசாயம் உள்ளூரச் செல்லரித்த நிலையிலேயே இருக்கும். இந்த நிலையில் தொழிலைப்பெருக்குவதாகவும், விவசாயத்தைப் புனர்நிர்மாணம் செய்வதாகவும் சொல்லிக்கொண்டு, ரூ. 3,400 கோடி நோட்டையும் அச்சடிப்பார்கள். இந்தப் பயங்கரமான நிலையில் விளை பொருளை அதிகமாக உற்பத்தி செய்யவோ, தொழிற்சாலையில் உற்பத்தியாகும் பொருள்களை வாங்கவோ குடியானவர்களுக்குச் சக்தியிருக்குமா? ஆதலால் குடியானவர்களும் தொழிலாளர்களும் சுகப்படப் போவதில்லை, அவர்களை நம்பிப் பண்டங்களை உற்பத்திசெய்யும் இயந்

திரங்களும் இயங்கப்போவதில்லை என்பது நிச்சயம். எனவே விவசாயத்தில் கிடைக்கும் வருமானத்தை 130 சதவிகிதமாக உயர்த்துவதும் தொழிலில் கிடைக்கும் வருமானத்தை 500 சதவிகிதத்துக்கு உயர்த்துவதும் சாத்தியமாகாது. ஆதலால் முதலாளிகள் போட்ட இந்தத்திட்டம் நிறைவேறுவதும் சாத்தியமாகாது.

பொதுஜனங்களுக்கு நன்மையளிக்கும் திட்டத்தைத் தொழிற்சாலை முதலாளிகளால்—அவர்கள் எவ்வளவுதான் நல்லவர்களாக இருந்தாலும்—தயாரிக்கமுடியாது. அதைப் பொதுஜனங்களின் உண்மையான பிரதிநிதிகளாயுள்ளவர்கள் தயாரிக்கமுடியும் என்பதை இந்தத் திட்டம் சந்தேகத்திற்கு இடமில்லாமல் காட்டிவிட்டது. பொதுஜனங்களின் பிரதிநிதிகள் தயாரிக்கிறதிட்டம் ஒன்று விரைவில் வெளிவருமா? நிச்சயமாக வெளிவரும். ஆனால் அது எவ்வளவு விரைவில் வெளிவரும் என்கிற விஷயம் நாம் எவ்வளவு விரைவில் சுதந்திரம் அடையப்போகிறோம் என்பதைப் பொறுத்திருக்கிறது. நமது தலைவர்களை விடுதலை செய்யாமலும் ஹிந்து முஸ்லிம் ஒற்றுமை ஏற்படாமலும் இருந்தால் சுதந்திரத்தைப்பற்றி நாம் கனவிலும் நினைக்க முடியுமா? ஆகையால் தலைவர்களின் விடுதலைக்கும் காங்கிரஸ் லீக் ஒற்றுமைக்கும் நாம் செய்கிற கிளர்ச்சியின் வேகத்தைப் பொறுத்தே பொதுஜனங்களுக்கு நன்மை பயக்கும் திட்டம் வெளிவருவதும் இருக்குமென்று சொல்லிவிடலாமல்லவா?

---

